# புதிய நாணய மாற்றுப் பட்டியல்

| அ. | பை | நயா பைசா | அ. | பை | நயா பைசா | அ. | பை | நயா பைசா | அ. | பை | நயா பைசா |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 3 | 2 | 4 | 3 | 27 | 8 | 3 | 52 | 12 | 3 | 77 |
| 0 | 6 | 3 | 4 | 6 | 28 | 8 | 6 | 53 | 12 | 6 | 78 |
| 0 | 9 | 5 | 4 | 9 | 30 | 8 | 9 | 55 | 12 | 9 | 80 |
| 1 | 0 | 6 | 5 | 0 | 31 | 9 | 0 | 56 | 13 | 0 | 81 |
| 1 | 3 | 8 | 5 | 3 | 33 | 9 | 3 | 58 | 13 | 3 | 83 |
| 1 | 6 | 9 | 5 | 6 | 34 | 9 | 6 | 59 | 13 | 6 | 84 |
| 1 | 9 | 11 | 5 | 9 | 36 | 9 | 9 | 61 | 13 | 9 | 86 |
| 2 | 0 | 12 | 6 | | 37 | 10 | 0 | 62 | 14 | 0 | 87 |
| 2 | 3 | 14 | 6 | 3 | 39 | 10 | 3 | 64 | 14 | 3 | 89 |
| 2 | 6 | 16 | 6 | 6 | 41 | 10 | 6 | 66 | 14 | 6 | 01 |
| 2 | 9 | 17 | 6 | 9 | 42 | 10 | 9 | 67 | 14 | 9 | 92 |
| 3 | 0 | 19 | 7 | 0 | 44 | 11 | 0 | 69 | 15 | 0 | 94 |
| 3 | 3 | 20 | 7 | 3 | 45 | 11 | 3 | 70 | 15 | 3 | 95 |
| 3 | 6 | 22 | 7 | 6 | 47 | 11 | 6 | 72 | 15 | 6 | 97 |
| 3 | 9 | 23 | 7 | 9 | 48 | 11 | 9 | 73 | 15 | 9 | 98 |
| 4 | 0 | 25 | 8 | 0 | 50 | 12 | 0 | 75 | 16 | 0 | 100 |

பாராட்டுரை.

“உரிமை முழக்கம்” ஆசிரியர் திரு. பி. வீரபத்திரன் அவர்களை, அவர்களது இளமை முதலே நான் நன்கு அறிவேன். ஊக்கமும் உழைப்பும் உயர்ந்த நோக்கமும் கொண்டவர். சமூகப்பணி, நாட்டுப்பணி இவைபுரிவதற்கு எவ்வாற்றாலும் தகுதிவாய்ந்தவர். அவர் வெளியிடும் பத்திரிகை எல்லோருடைய ஆதரவையும் பெறும் என்று எதிர்பார்க்கலாம்.

ஒப்பம்.

**R. வீரபத்திரன்,** M. A., L. T.
தமிழ்ப்பேராசிரியர்,
பல்கலைக் கழகக் கல்லூரி, திருவனந்தபுரம்.

பிற்பட்டோர் முன்னேற்ற இதழ்.

# உரிமை முழக்கம்

ஆண்டு சந்தா மலருடன் ரூ. 4.
தனி இதழ் அணு 4.

| முரசு 1 | 1—3—57 | முழக்கம் 3 |
|---|---|---|

# காஷ்மீர் நிலை.

காஷ்மீர் விவகாரம் இன்றைய உலகில் மிக நெருக்கடியான நிலையிலும், முக்கியத்துவம் வாய்ந்ததாகவும் ஆவதற்கு மூன்று முக்கிய காரணங்கள் உள்ளன. அவையாவன:

சூயஸ் பிரச்சனையில் பிரிட்டன் நேர்மையற்ற முறையில் நடந்து அதனால் உலக மக்களிடையே அதிருப்தியை எற்படுத்திக் கொண்டது.

நீண்டநாட்களாகவே காஷ்மீரத்தில் ஒருபகுதியை தனது ஆதிக்கத்தில் கொண்டுவரவேண்டுமென்ற அமெரிககாவின் ஆசை.

இன்றைய பாகிஸ்தான் பிரதமரின் கட்சியில் பிளவு—சிறுபான்மையான கட்சி.

மேலேகூறிய மூன்று காரணங்களையும் நாம் கவனததில் அடிப்படையாகவைத்துக் கொண்டு காஷ்மீர் பிரச்சனையை ஆராய வேண்டும்.

சூயஸ் பிரச்சனையில் உலக வல்லரசுகளில் ஒன்றான பிரிட்டன் கைக்கொண்ட நேர்மையற்ற போக்கினை இந்தியா கண்டித்தது. உலகமே கண்டித்தது. எகிப்தில் போரை ஆரம்பிக்க ஒரு இஸ்ரேலை உபயோகித்தது, காமன்வெல்த்தில் கட்டுப்பட்ட இந்தியா, பிரிட்டன் செய்வது தவறு என்று கூறியதை பிரிட்டனுக்குப் பிடிக்கவில்லை. பாகிஸ்தானைப்போல பிரிட்டன் செய்வதற்கெல்லாம் தாளம்போடும் நிலையில் இல்லாமலிருந்ததால்தான் பிரிட்டனுக்கு இந்தியாவின் மேல் கோபம். காஷ்மீரில் போரை ஆரம்பிக்க பாகிஸ்தானை பிரிட்டன் உபயோகிக்கிறது ஒரு இஸ்ரேலை ஆதரித்து எகிப்தை போர்க்களமாக்கியதால் பிரதமராயிருந்த அந்தோனி ஈடன் சென்ற இடம் தெரியவில்லை. அதனால் இன்று பிரதமராயிருக்கும் மாகமில்லன் நிலை என்ன என்றும் நாம் புரிந்து கொண்டிருக்கிறோம். ஈடனை பிரிட்டிஷ் மக்கள் பதவியிலிருந்து துரத்தியதால் அவர்கள் போரை விரும்பவில்லை எனத்தெரிகிறது. சென்ற ஜனவரி 24ந்தேதி பந்தோபஸ்து சபையில் இந்தியாவுக்கு விரோதமாக தீர்மானத்தை நிறைவேற்றபிரிட்டன் மிகப்பாடுபட்டிருக்கிறது.

இந்தியாவின் ஒருபகுதியாக காஷ்மீர் இருப்பது அமெரிக்காவுக்கும் பிரிட்டனுக்கும் விருப்பமே இல்லை. ஏனென்றால் காஷ்மீர் சோவியத் ரஷ்யாவின் எல்லையையும், சைனாவின் எல்லையையும் தொட்டிருக்கிறது. அங்கே படைத்தளங்களையமைத்தால் ரஷ்யாவையும் சைனாவையும் ஒருகை பார்க்கலாம் என்பதே அமெரிக்காவின் உள் எண்ணம். முன்பு கிரஹாம் என்பவரை அனுப்பி காஷ்மீரை மூன்றாகப் பிரித்து ஒருபகுதி பாகிஸ்தானத்திற்கும், மற்றொருபகுதி இந்தியாவுக்கும், வடபகுதி ஐ. நா. பாதுகாப்பிலும் கொண்டுவரவேண்டுமென்ற திட்டத்தை அவர் கூறினார். இதை அமெரிக்கா மிக சந்தோஷத்



4-ம் பக்கம் பாக்க.

# உண்மை

செல்வரெங்கராசன்.

உண்மை என்பது உள்ளும் புறமும் ஒத்திருப்பதேயாகும். உள்ளத்தைப்பற்றியது உண்மை. உள்ளத்தோடு பொருந்தாது சொல்லோடும் மெய்யோடும் பொருந்துவது உண்மையாகாது. உண்மையல்லாத ஏதாவதொன்றை உரைப்பது குற்றமும் துன்பமும் ஆவது மாத்திரமேயன்றி உரைப்பவனுடைய அறிவின்மையையும் விளக்குவதாகின்றது. ஆகவே பொய்ம்மொழி புகல்வது பூரியோர் செய்கையென்பது எல்லாரும் அங்கைக்கனி போல் தெள்ளிதின் உணரற்பாலதேனும் பொய்வார்த்தைகள் உலகில் எக்காலத்தும் பொதுவாக இருப்பதைக் காணுமிடத்து வியப்பு மேன்மேலும் பெருகா நிற்கின்றது.

தன்னுற்செய்யப்பட்ட ஒருகுற்றத்தை ஒளிக்கும் பொருட்டாயினும் ஒறுப்பு நேரிடா தபடி தடுக்கும்பொருட்டாயினும் ஒருவன்ஒரு பொய்யுரைத்தாலும் "பொய் சொல்லி வாழ்ந்தவனுமில்லை, மெய்சொல்லிக்கெட்டவனுமில்லை" என்ற பழமொழியின்படி உண்மை எஞ்ஞான்றும் வெளிப்படாமற்போவதுமில்லை அதன் பின்னர் குற்றஞ்செய்ததனால் உண்டாகின்ற வெட்கத்தோடு பொய்யுரைத்த வெட்கமும் சேர்ந்து மானக்கேடு பெருகிவருகின்றதே யொழிய நன்மை எதுவுமில்லை.

தாயுமான வள்ளலும் பொய்யுரைப்போரைக் கண்டித்திருத்தல் காண்க:

"பொய்வளரும் நெஞ்சினர்காள்! காணுத
பொய்யிலா மெய்யறி வரில்" [காட்சியே

இராமலிங்கவள்ளலும் பொய்யுரைப்போரைக் கண்டிக்கின்றார்.

"பெருமை பெறு நினதுபுகழ் பேச வேண்
பொய்மை பேசாதிருக்க வேண்டும்" [டும்

நான்மணிக்கடிகையின் ஆசிரியர் விளம்பிநாகனார் விரித்துரைப்பதை நோக்குங்கள்:

"ஒருவனைப் பொய்சிதைக்கும்; பொன்
போன்ற மேனியை...."

ஏலாதியின் ஆசிரியர், 'கணிமேதையார்' "களவும் களவியைக் காணுமின்!" "பொய்யுரையான் வையான் புறங்கூறான்" "விண்ணோர்க்கு வேந்தனும் இவ்வுலகம்விட்டு"

இன்னல் வாட்டியபோதினும் வறுமையின் கொடுமையின் போதும் வாய்மையைக் கைவிடலாகாது.

"தன்னெஞ் சறிவது பொய்யற்க! பொய்த்த
பின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்."

என்றார் நமது நாயனார்

நாம் புரிந்த குற்றம் கண்டு பிடிக்கப்பட்டால் இன்னும் ஒறுப்பு மிகுதியாகுமென்று நம்முடைய மன அச்ச மேலீட்டினால் பொய்யுரைப்பின் அது நம்மை அல்லும் பகலும் வருத்திக்கொண்டேயிருக்கிறது.

நாம் பொய்யுரைத்த செய்தி வெளியாகிவிட்டால் நம்முடைய தகுதி ஒரு சிறிதும் பயனற்றதாகிவிடுவதுமன்றி நம் பெற்றோர் முதலான எவரும் நம்மிடத்தில் அணுவளவேனும்நம்பிக்கைவைக்கமாட்டார்கள். பிறகு ஒருபோழ்து உண்மையை உரைத்தாலும் ஒருவரும் நம்மை நம்பார்.

இஃதன்றி பொய்யுரைப்பதில் இன்னுமொரு இடுக்கணும் விளைகிறது. பொய்யுரைக்கப்புகின் ஒருபொய்யோடு ஒழிவதில்லை; முதலில் சொன்ன பொய்யை ஒளிக்கும் பொருட்டு வேறொரு பொய்யைச் சொல்ல வேண்டி வரும். அதற்காதாரமாகப் பிறிதொரு பொய் பேசவேண்டி நேரிடும்.

விவேகசிந்தாமணியாரும் பொய்மையைக் கண்டிக்கிறார்.

"பொய்யருக்குப் பொய்யுரைத்தால் வெற்றி
யுண்டாம் ஆனாலும் பொய்யேயாக
மெய்யருக்குப் பொய்யுரைத்தால் தேய்
பிறைபோல்தவங்குறையும் மிடி யுண்டாகும்"
[விவேகசிந்தாமணி]

பொய்மையை எப்போதும் தவிர்தல் வேண்டும். உள்ளப் பற்றன்றியே ஒருவர் பால் நட்புடை போல நடித்தல் வஞ்சக மன்றோ? அங்ஙனமே ஒருவர் உரைப்பது நமக்கு உடன்படாதிருக்கையில் அதற்கிசை வது போலப் பேசுவோமாயின் அதுவும் உள்ளும்புறமும் ஒவ்வாத வஞ்சகமேயாகும்.

ஒருவனுக்கு நாம் உண்மையை உரைத்த விடத்தும் அவன் நாம் உரைத்ததை உள்ள படி புரிந்துகொள்ளாமையால் நமக்கு ஒரு நன்மையுண்டாவதாயிருக்கின், அந்நன்மை யின் பொருட்டே, அவ்வுண்மையை இன்னும் செம்மையாக விரித்துரையாமல் அந்தப் போக்கிலேயே விட்டுவிடுவதும் வஞ்சகத்தின் பாற்பட்ட குற்றமேயாகும்,

தற்புகழ்ச்சியும், விரிவான வார்த்தையும் பொய்யுரைப்பதற்கு வாயில்களாதலின் அவற் றையும் ஒழித்தலவேண்டும்.

ஒவ்வொருவருக்கும் இயற்கையில் வாயி னிடமாகத தோன்றுவது மெய்யே. ஆதலின் மெய்மையை வாய்மை என்பர் வள்ளுவப் பெருந்தகை.

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத்
தோன்றும்
வாய்மையி னல்ல பிற"—வள்ளுவர்.

"கோடானு கோடி கொடுப்பினுந் தன்
னுடைநாக்
கோடாமை கோடி பெறும்"

என்றனர் ஔவை மூதாட்டியார்.

ஆகவே ஆர்கலியுலகத்து மக்கட்கெல் லாம் வாய்மையிற் சிறந்தது ஒன்றுமில்லை என்பதை யாவரும் உணர்ந்து அதன்படி நடத்தல்வேண்டும்.

"வாழ்க்கையின் வாய்மையெனும்
தூய்மையைக் கைவிடேல்!"

★

# "உரிமை முழக்கம்"

உடலுக் குயிரென "உரிமை முழக்கம்"
படர்கலி நீங்க பைந்தமிழ் வாழ
மடமை ஒழித்து மானம் காக்க
அடலுடை தஞ்சைப் பதிக்கு வந்தது
வந்த உரிமை முழக்க மதால்நாம்
சிந்தை மகிழ்ந்தோம் சிறப்புடன் கலைகளைப்
பேணி வளர்க்கும் பெருமை யுணர்ந்தோம்
ஊனமில் கடமை யொன்றே நமக்கு
வானகம் வாழ்த்த வழிகாட் டிடுமே.

அன்பன்,
புலவர் தீ. சுப்பையா,
தலைமைத்தமிழாசிரியர்,
ஆத்தூர்.

தோடு ஆதரித்ததும் அதற்கு இந்தியா எதிர்ப்பும் தெரிவித்தது. காஷ்மீரை சுதந்திர நாடாக்கி அதற்கு ஷேக்அப்துல்லா சுல்தான் ஆகவேண்டுமென்ற சதிவேலை நடந்ததால் தான் இன்று ஷேக்அப்துல்லா சிறையில் இருப்பதும் நாடறிந்ததே.

இன்று பாகிஸ்தானில் பிரதமராகவிருக்கும் சுஹராவர்த்தியின் கட்சி ஜின்னு அவாமி லீக் என்பதாகும். கிழக்கு பாகிஸ்தானில் மட்டிலுமே அக்கட்சியுள்ளது. மேற்கு பாகிஸ்தானில் டாக்டர் கான்சாஹிப்பின் கட்சியான குடியரசுக்கட்சியின் தயவால் பதவிக்கு வந்தவர். மக்களின் அன்றாட பிரச்சனைக்குத் திட்டமின்றி வறுமையால் வாடும் மக்களின் கவனத்தைத் திருப்புவதற்கும் தமதுபதவிநீடிக்க வேண்டுமென்பதற்காக செய்யும் வேலை. பசி, பட்டினியால் வாடும் மக்கள் புரட்சி செய்து அரசாங்கத்தைக் கவிழ்க்கக்கூடுமல்லவா? அவ்வாறு நிகழாதிருக்க மக்களின் கவனத்தை போரில் இழுத்து விடுகிறர்.

பொதுவாகவே ஆசிய நாடுகள் சுதந்தரத்துடன் இயங்குவது மேற்கு நாடுகளுக்கு விருப்பமில்லைதான். இந்தோனேஷியாவில் கலகத்தைத் தூண்டிவிட்டு வேடிக்கை பார்க்கின்றன. தான் செய்யும் நேர்மையற்ற செயலைக் கண்டிக்கத் தலைப்படும்பொழுது அவைகளுக்கு ஆத்திரம் வருகின்றன. ஹங்கேரியில் நடந்தவற்றைக் கண்டித்தால் ரஷ்யாவுக்கு இந்தியா மீது கோபம். அதனல் பந்தோபஸ்து சபைத்தீர்மானத்தில் நடுநிலைமை வகித்தது.

ராணுவகூட்டமைப்புக் கூடாதென்றல் அமெரிக்காவுக்குக் கோபம். எங்காவது போர் நடந்துகொண்டேயிருந்தால்தானே போர்க் கருவிகள் கோடிக்கணக்கான டாலர்களுக்கு செலவுசெய்ய இயலும். உதவியென்றபேரால் உதவிபெறுகின்ற நாடுகள் மீளாத சிக்கலில் சிக்கி அடிப்பணிய இயலும். இவைகளை இந்தியா எதிர்ப்பதால் அமெரிக்கா இந்தியாவிடம் கோபம் கொள்ளுகிறது.

போர் ஆரம்பிக்கின்ற சூழ்நிலையில் நாம் இருப்பதாக நமது தலைவர்கள் கூறுகின்றனர். நாம் போரை விரும்பவில்லை. நமக்கு நாட்டின் முன்னேற்றமே பெரிது. போர்வந்தாலும் தவிர்ப்பதற்கில்லைதான்.

## நேயர்களுக்கு:

வாசக நேயர்களும், நண்பர்களும் வேண்டிக்கொண்டதற்கிணங்க "உரிமை முழக்கம்" அமைப்பில் மாறுபடுகிறது. நண்பர்கள் "உரிமை முழக்கம்" அமைப்பில் குமுதம் ஆனந்தவிகடன் போன்ற பத்திரிகைகளின் அளவிற்கு மாற்றவேண்டுமென்று வேண்டுகோள் விடுத்ததால் அவை ஏற்றுக்கொண்டு "ஏப்ரல் இதழ்" முதல் மாற்றத்தலைப்பட்டிருக்கிறோம் என்பதை அறிவிக்கிறோம்.

ஏப்பரல்மாத "உரிமை முழக்கம்" காலஞ்சென்ற தமிழ்மேதை நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் நினைவு சிறப்பிதழாக வெளிவருகிறது. இவ்விதழில் தமிழக அறிஞர்களின் தலைசிறந்த கட்டுரைகளும், கதைகளும், வாழ்க்கை வரலாறுகளும் வெளிவரும். பல விதவண்ணப்படங்களுடனும், சிறந்த புகைப்படங்களுடனும் மலரைச் சிறந்த முறையில் வெளியிடக் கருதியிருக்கிறோம். உரிமை முழக்கத்தின் ஆரம்ப மலர்! அன்பர்கள் ஒவ்வொருவரும் நல்ஆதரவு கொடுத்து மலரைச் சிறப்பிக்க வேண்டிக்கொள்ளுகிறோம்.

★

## முகப்புப்படம்.

இராசராச சோழனல் எழுப்புவிக்கப்பெற்ற **தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில்**

புகைப்படம் உதவியவர்:-

திரு. அனேப் சந்த் அவ[illegible]

த[illegible]ரூர்.

# உரிமையின் கடமை.

சி. இரத்தினசாமி

ஒரு மனிதனுக்குத் தாய்போய்விட்டால் அறுசுவை உணவு போய்விடும். தந்தை போய்விட்டால் கல்வி அறிவுக்குரிய வாய்ப்பு போய்விடும். ஆனால் தன் நாட்டின் உரிமை போய்விட்டால் அவன் வாழ்வதே கடினம்.

பண்டைத்தமிழர்களின் வரலாற்று ஏடுகளைப் புரட்டிப்பார்ப்போமானால் நாட்டின் உரிமைக்காக தன் உயிர் கொடுத்தோர் எண்ணற்றவர்கள். தன்னைத் தவிர தன் தாய்க்கு வேறுகதியில்லை என்பதும் தெரியும். இருந்தாலும் தாயைவிட நாடு பெரிது கடமைதான் பெரிதெனக் கருதி போர் புரியச் சென்றுள்ளான். யார்? கண்களிலே கண்ணீர் வடிய நின்று காட்சி அளிக்கும் இல்லக்கிழத்திகளைவிட்டு எத்தனையோ இளங்காளைகள் சென்று இருக்கிறார்கள்.

தந்தையையிழந்தும், தமையனையிழந்தும், கணவனையும் நாட்டின் உரிமைக்காகப் பலிகொடுத்தும் மேலும் தன்பால் மனம் மாறாத பாலகனின் கையில் வேல்கொடுத்து போருக்கு அனுப்பிய வீரமாதின் வரலாற்றினை நினையும்போது நாமும் தமிழர்களா? என ஐயப்பட வேண்டியுள்ளது.

தமிழர்களே! தாய்நாட்டின் மண்தான் நம்முடைய உடலிலுள்ள தசைகளாக இருக்க வேண்டும். நம்நாட்டின் தண்ணீர்தான் நம் நரம்பில் ஓடும் இரத்தமாக இருக்கவேண்டும். கலை, பண்பாடு, நாட்டின் எல்லை, மலை, காடு, சோலை, நதி, குளம்,,மண்ணில் மறைந்துள்ள உலோகப்பொருள்கள் இன்னும் இயற்கை வகைகள் என்னென்ன இருக்கின்றனவோ அனைத்தையும் நம் உடம்பின் ஒவ்வொரு அங்கங்களாகவைத்துக்காப்பாற்றவேண்டும்.

உடலில் ஒரு அங்கத்தில் காயமோ அடியோ ஏற்பட்டால் எவ்வளவு துன்பப்படுகிறோமோ அதுபோல மேலாக துன்பத்தில் ஆழ்ந்து மேற்கூறிய இயற்கை அங்கங்கள் அயலானுக்கு அடிமைப்பட்டால் மீட்கவேண்டும். மறத்தமிழராகிய நாம் மானத்தோடு வாழ வேண்டும். வாழ்ந்தும் இருக்கிறார்கள்.



8-ம் பக்கம் பார்க்க,

# கவிமணியின் வாடாமலர்கள்

தே. ப. பெருமாள்.

சென்ற இதழ் தொடர்ச்சி.

இந்த இளைஞரின் அறிவுரையைக் கேட்டார்? மேலும் அக்கூட்டத்திலுள்ளாரில்சிலர், இவரை நாத்தழும்பேற நாத்திகம் பேசுவோன் எனத்தூற்றினர். அததுடன் இவர் மீது அடங்காச் சினமும் கொண்டனர். இத்தகையோரின் நடுவே கவிமணி பின்னர் நிற்க விழையவில்லை. இந்த நெறிகெட்ட செயலைப்பார்கக உளம் இசையாதவர்போல் அவ்விடத்தைவிட்டு தம் இல்லம் திரும்பினர்.

ஆடு பலியானதையும், அதன் குருதியை அள்ளியுண்ட சாமிகொண்டாடியின் பேய்க் கூத்தையும் கேள்விப்பட்டு இவர்உள்ளம் புண்ணுனர், இந்தச்சூழ்நிலையிலதான் இவர்

"நாடியறம் தேடியிரும் நற்றேரூர் தன்னிலமர்
நல்ல மாடனென்றும் மறவ னென்றும்
கோடிபழி செய்தபெருங் கொலைஞர் வேதம்
கூறிய தெனவே தெளிந்து கண்டு
ஆடினர், ஆடறுத்தார், அள்ளி யுண்டார்
ஐயையோ! இக்கொடுமைஅறிகி லேனே!"

என்ற கவிதையைப் பாடினர். பாடலின் வரிகள் இன்று முற்றும் கிடைக்கவில்லை. எனினும் இதிலிருந்து கவிமணியின் அககாலத்திய தெளிந்த அறிவினையும் சீர்திருத்த நோக்கத்தையும் புரிந்துகொள்ளலாம்.

கவிமணியின் இளமைப்பருவத்தில் தேரூரில் அவரது நெருங்கிய நண்பராக இருந்த ஒருவா தமது வீட்டால் ஏற்பட்ட மனவேற்றுமையின் காரணமாக மதுரைக்குச் சென்றுவிட்டார், கொஞசகாலமாக இவர் ஊர் திரும்பவே இல்லை இவ்வேளை இவரது இளமனைவியார் பூப்பு எய்தினர். இச்செயதி தெரிவித்து இவரது வீட்டிலுள்ளார் இவருக்குக் கடிதம் அனுப்பினர்கள். கடிதம் கண்டதும் இவர் வீடு திரும்புவார் என இவர்கள் எதிர்பார்த்தனர். ஆனால் கடுமையான உறுதிகொண்டு பிணங்கியிருந்த இவர் வீடு திரும்பியபாடாக இல்லை. இந்நிலையில் வீட்டவரின் துன்பமோ சொல்லமுடியாத அளவுக்காயிற்று.

மனைவி பூப்பெய்திய செய்திதெரிவித்துக் கடிதம் அனுப்பியும் இவர் ஊர் வந்து சேரவில்லையென்ற செய்தி தேரூர் பூராவும் பரவியது. இவரது நண்பர்கள் இதுபற்றிப் பல விதமாகப் பேசிக்கொண்டனர். இவர்களில் சிலர் கவிமணியிடம் வந்து "நீ கடிதம் அனுப்பினால் அவன் வந்து விடுவான்" என்று சொல்லி இவரைக் கடிதம் அனுப்ப வேண்டிக் கொண்டனர்.

கவிமணி இவர்களது வேண்டுகோளுக்கிசைந்து கடிதமெழுதி, கவிதை ஒன்றையும் அத்துடன் அனுப்பிவைத்தார்.

மந்தாரை மலர்ந்திருக்க
மதுவுண்ணும் வண்டெங்கே?
மாமுல்லை கொடிபடர
வளருங்கொள் கொம்பெங்கே?
சிந்தாத மணியிருக்க
ஒளியெங்கே சென்றதெனத்
தேரூரில் பலர்கூடித்
தெரிந்துகொளக கேட்டதற்கு
நந்தாத பரஞான
அமுதுண்டு தெவிட்டெறியும்
நற்பரமா னந்தவருள்
பெறச்சென்று, நண்பா நீ
வந்தாலே மறுமொழியும்
வகுப்பமெனச் சோதிடநூல்
வல்லாரும் கூறுகின்றார்
வகையேதும் அறியேனே!

என்பதுதான் அக்கவிதை. இனிய நயமும் நகைச்சுவையும் கவிதையில் பொங்கி வழி கின்ற தல்லவா?

ஒரு சமயம் கவிமணி தங்கிவாழ்ந்த புத்தேரிக் கிராமத்துக்கு, செண்பகராமன் பள்ளு என்னும் ஏட்டுச்சுவடியை அச்சேற்றும் பொருட்டு, அதன் பதிப்பு வேலையை நடத்திக்கொண்டிருந்த மரியஜான் காலிங்கராயர் என்பார் கவிமணியைக் கலந்துகொள்ள வந்தார். இவர் கவிமணியிடம் அந்நூலிலுள்ள பல அருமையான பாடல்களை அவற்றிற்குரிய சந்தத்துடன் பாடிக்காட்டினார். பாடலின் இசையும் பொருள் நயமும் கவிமணியின் உள்ளத்திலும், அப்போது கவிமணியின் உடனிருந்தோர் இதயங்களிலும் இன்பத்தேனைப் பாய்ச்சின.

இப்பாடலின் இசையில் இதயம் தோய்ந்து, மூன்று வயதுகூட நிரம்பாத கவிமணியின் பேத்தியாகிய வள்ளியம்மாள் என்னுஞ் சிறு குழவி இசைக்குத் தக்கவண்ணம் சாய்ந்தாடிக் களிகொண்டது. இந் நிகழ்ச்சியை எல்லோரும் ஊன்றிப் பார்வையிட்டனர். "இதுதான் உண்மைக்கவிதையின் இயல்பு; குழந்தையின் கருத்தையும் ஈர்க்கும் நடையும் ஓசையும் பாடலுக்கு அமைந்துள்ளன." என்று இக்கவிதைகளைப் பாராட்டினார் கவிமணி. பதிப்பாசிரியர் கவிமணியிடம் "தாங்கள் இந்நிகழ்ச்சியை வைத்தே இந்நூலுக்கு ஒரு வாழ்த்துதவ வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார். அவரும் அவ்வண்ணமே இசைந்து



"வள்ளலுயர் தென்கோவை
மன்செண் பகராமன்
பள்ளினிமை யானும்
பகருவதேன்?—தெள்ளமுதப்
பாட்டிசைக்கோர் பச்சைப்
பசலையுமே சாய்ந்தாடிக்
காட்டியதா லுள்ளக் களிப்பு

என்னும் கவிதையைப் பாடிக்கொடுத்தார்.

திருவனந்தபுரத்தில் வைத்து உயர்நீதி மன்ற நீதிபதி கே. ஜி. சேஷையர் தலைமையில் அவதான நிகழ்ச்சியொன்று நடைபெற்றது. அவதானத்தை நடத்தியவர் நாகர் கோவில் தசாவதானி ஆறுமுகம்பிள்ளை என்பவராவர். நினைவாற்றலையும் புலமையினையும் தெளிவுற எடுத்துக்காட்டும் இந் நிகழ்ச்சியைக்காண அறிஞர் பெருமக்கள் அனைவரும் கூடியிருந்தனர். அவதானத்தைப் பாராட்டத்தக்கமுறையில் அவதானியார் செய்துகாட்டினார். தலைமைதாங்கிய சேஷையர் அவதானியின் அறிய ஆற்றலைவியந்து "பேஷ், பேஷ்" என்று கழிபேருவகையில் பாராட்டினார். அக்கணமே தமது அருகாமையில் இருந்த நமது கவிமணியிடம் இவரது கருத்தை வினவினர். உடன்தானே கவிமணி எழுந்து

"ஆறுமுகம் பிள்ளை
அவதானம் கண்டெளியேன்
வேறுமுக மன்கூற
வேண்டுமோ?—தேறுமதி
சேஷையா மெச்சித்
திருவாய் மலர்ந்துசபாஷ்
பேஷையா என்ற பிறகு"

என்ற நித்திலக் கவிதயைப் பாடினார். இதைக் கேட்ட அறிஞரவை கவிமணியின் இந்தச் செம்மைசான்ற கவிதையுள்ளத்தை வியந்து, புகழ்ந்து பாராட்டியது.

★

உலகிலேயே உயர்ந்த நூலெனக் கருதப் படும் குறளில் குறைந்த பாவில் நிறைந்த கருத்தில் வான் புகழ் வள்ளுவன் மானம் என்ற அதிகாரத்தில் "மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னர் உயிர் நீப்பர் மானம் வரின்" எனக்கூறியுள்ளார். இந்தக்குறளில் கவரிமான் ஒருமயிர் நீங்குமானல் உயிரை விட்டுவிடும் எனக் குறிப்பிட்டு உள்ளார். ஐந்து அறிவு படைத்த விலங்கு, உயிரை விடத் தன் மயிர்தான் பெரிதெனக்கருதி மானத்துடன் மடிகிறது. ஆனல் நம்நாடாகிய உடலில் உள்ள இயற்கை வளங்களையும் தென்னகத்தின் பெரும் பாகங்களையும் இழந்தும் அஞ்சாமல் நெஞ்சு நிமிர்ந்து கொஞ்சம்கூட மானம் இன்றித்தலை நிமிர்ந்து நடக்கிறோம்.ஐயகோ! என்ன மனிதத்தன்மை

ஒருநாட்டின்உரிமை மனிதத்தன் மைக்குத்தான் மக்களுக்கு அல்ல. அவ்வுண் மையை எவரும் மறுக்க முடியுமா? ஆனல் ஒன்றுக்கும் உதவாத உழுத்துப் புழுத்துப் போகும் உடலையே மனிதர்கள் என எண் ணங்கொண்டவர் ஏராளம். இவ்வெண்ண மானது தற்கொலை செய்த குற்றத்தைவிட மேலான குற்றம். உரிமையின் கடமையை மறந்து தன்னலப் பேர்வழிகளின் நரம்பில் ஓடுவது இரத்தமல்ல சாக்கடை நீர்.

திரு. சங்கரலிங்க நாடார் போன்ற தியா கிகள் வாழ்க்கையில் உரிமை மந்திரத்தை விரதமாகக்கொண்டு மனம், வாக்கு, காயங் களில் - நடத்தி உயிரைப் பலிகொடுத்துங் கூட நாம் உரிமையைப் பெருமல் உணர்ச்சி யில்லாமல் மரக்கடடைகளாகவாழுகின்றோம். அரசியலாரிடம் தனி ஒருவர் உரிமை வேண்டும என குறை வேண்டினல் அது ஓனயிடத்தில் ஆடு தன்குறையை முறயிட் டதை ஒக்கும்.

உரிமை பெறுவது குளத்தில் குளிப்பது போன்று எளிதில் எண்ணிவிட முடியுமா? அப்பப்பா? அது பெரும்புயல் நிறைந்த கட லில் சென்று குளிபபது போல் அல்லவா? அங்கு ஆளையே விழுங்கும் ஆயிரக்கணக் கான நீர்வாழ் இனங்களும் கப்பலையே கவிழ்க் கும் பெரும் மலைபோன்ற திமிங்கிலங்களும் ஏராளமாக உண்டு. ஆயினும் அங்குதான் உரிமையின் உயிர் உள்ளது, ஆபத்தும், ஆழமும் இல்லாத குறுகிய குளத்தில் உயி ரைக் காப்பாற்றிக்கொள்ளலாம். ஆனல் நீண்டநாள் நிம்மதியுடன் வாழ்ந்திருகக முடியுமா? ஒருபோதும் முடியாது.

தனிமனிதன் உரிமைக்குரலைவிட தமி ழர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து மொழி நாடு உரிமைகளைப் பெற போராட வேண்டும். தென்னக மொழிகளிலேதலைசிறந்த மொழி நம் தாய்மொழி. ஒலி இன்பம், வடிவம், கலை, கருத்து, ஒழுக்கம் இன்னும், பலதிறததிலும் நம்மொழியைவிட மேலான மொழிகள் உல கில் வேறு எந்த மொழிகளிலும் கிடையாது. பல நூற்றுண்டுகளாக நம் தமிழ் அன்னை ஆங்கிலமாதிடம் அடிமைப்பட்டு அதனல் அவள்விட்ட கண்ணீர்த்துளிகள் வெள்ளமாக கரைபுரண்டு ஓடின.

அவள் துயர் துடைக்க அறிஞர் பலர் அரும்பாடுபட்டனர். அதன் பலன்தான் அரசியலார் தமிழை ஆட்சி மொழியாக்க சட் டம் இயற்றியுள்ளனர். இதனல்தமிழ்த்தாயின் கண்ணீர்தான் நின்றனவே யன்றி உள்ளத

12-ம் பக்கம் பார்க்க

## நேயர்களுக்கு!

ஏப்ரலில் வெளிவரும் "உரிமைமுழக்கம்" நாவலர். பண்டிதர். ந மு. வேங்கடசாமிநாட்டார் அவர்களின் நினைவு மலராக அதிக பக்கங்களுடனும் சிறந்த வண்ணப்படங்களு டனும் வெளிவரும். மலருக்குரிய கதை, கட் டுரை, கவிதைகள் மார்ச் 10-ந்தேதிக்குள் நமது அலுவலகத்திற்கு அனுப்பிவைக்கக் கோருகிறோம்.

ஆசிரியர்

# வைத்திய வினு விடை

குறிப்பு: கீழே குறிப்பிட்டுள்ள மருந்துகள்யாவும் ஹோமியோபதி அல்லது பயோகெமிஸ்டரி மருந்துகளேயாகும்.

**1. முகப்பரு ஏன் உண்டாகிறது?**

**இதை நீக்க என்ன மருந்தை உபயோகப் படுத்தலாம்?**

முகப்பரு ஏற்பட பலகாரணங்கள் உள. குறிப்பாக மலச்சிககலால் ஏற்படுவதும் உண்டு. சில பெண்களுக்கு மாதவிடாய் உபத்திரவங்கள் [Mestrual trobels) ஏற்படுவதாலும் உண்டாகிறது.

இதை நீக்க பெரிபெரில் அக் அக்யு போலியம் (Berberis Aquipoliumm. T.) என்ற மருந்தை சுமார் ஒரு சொட்டு தண்ணீரில் (Cold water) கலந்து தினம் காலையிலும், மாலையிலுமாக உட்கொண்டு வந்தால் சீக்கிரத்தில் மறைந்துவிடும். கூடியவரை மலச் சிக்கல் ஏற்படாவண்ணம் பார்த்துக்கொள்ள வேண்டும்.

**2. இரவில் குழந்தை தூங்காமலிருந்தால் என்ன செய்யலாம்?**

குழந்தைகள் ஒரு நாளைக்கு சுமார் 12மணி நேரம்தான் தூங்கும். அந்த 12மணிநேரத்தை பகலிலேயே தூங்குமாயின் இரவில் தூங்காது. சில தாய்மார்கள் குழந்தை தூங்கவில்லை என்று தூங்குவதற்கு என விற்கும் மருந்துகளை [Slep Producing drugs] கொடுத்தும், சில ஜாதிக்காயை பாலில் உரைத்துக்

(12-ம் பக்கம் பார்க்க)

---

16-ம் பக்கத்தொடர்ச்சி

## உழவருக்கு ஒருசொல்.....

கண்டு வெளியிட்டிருக்கின்றன. நல்ல பலன் கிடைக்கும் என்று தெரிந்தும் நாம் வாளாவிருத்தல் அறிவீனமன்றோ?

ஜப்பானிய முறை சிறந்தது என்று கூறினேம்! அதை எப்படிச்சாகுபடி செய்வது என்று காணவேண்டாமா? உங்களின் மண் வளம், நீர்ப்பாய்ச்சல் இவைகளுக்கு ஏற்ப எந்த நெல் சாகுபடி செய்யலாம் என்பதை நீங்கள் தேர்ந்தெடுக்கவேண்டும். இதுபற்றி நீங்களே ஒருமுடிவுக்கு வருமுன் அருகிலுள்ள ஆராய்ச்சிப்பண்ணைகள், அல்லது விவசாய டிப்போக்களில் விசாரித்து, அவர்களைப்பன்னிப்பன்னி கேள்விகள்கேட்டு, எப்படி ஜப்பானியமுறையில் சாகுபடி செய்வது என்பவைகளை விளக்கமாகக்கேட்டு, அறிந்து விவசாயம் செய்தால் நாம் ஓரளவிற்கு நம் நாட்டைப் பட்டினியிலிருந்து விரட்டிவிட்டவர்கள் ஆவோம்! பற்றாக்குறை என்ற பேச்சை விலக்கவும் வழி உண்டாகும்!

உலகில் நாமும் உயர்ந்து விளங்கலாம். நம்நாட்டிலிருந்து வெளிநாடுகளுக்கு உணவுப்பொருளுக்கான செல்லும் நூற்றுக் கணக்கான கோடிரூபாய்கள் நம்மிடம் தங்கும்! அதை தொழில் வளர்ச்சிக்குப் பயன் படுத்திப்பற்பல வசதிகள் செய்து இன்பமுடன் வாழச்செய்யலாம்.

நாம் சிறிது சிரமப்பட்டு ஜப்பானிய முறையைக் கேட்டுத்தெரிந்துகொண்டுவிட்டோமானுல் அதன் மூலம் பலருக்கும் பரவச் செய்வதுடன், எதிரிகள் இந்தியாவை—தமிழகத்தை வளமானதாக்கும் வன்மையைப் பெற்றுவிடலாம்.

முயல்மின்! வெற்றி காண்மின்! பொன்னி நாட்டிற்கு—கங்கை நாட்டிற்கு! நல்லபெயர் பெற்றுத்தர உறுதிகொண்மின்! அப்போதுதான் நம் இளைஞர்களின் எண்ணமும் நிறைவேறுவதுடன் நாமும் இன்பமாக வாழமுடியும்! சிந்தித்து செயல் புரிக!

---

சென்ற இதழ் தொடர்ச்சி:

# ★ அன்றும் இன்றும் ★

பறம்பை. மு. ச. இராசன்.

**வாணிபம்:**

தமிழர் பெருங்கடலிலே மரக்கலங்கள் ஓட்டிச்சென்று எகிப்து போன்ற கீழைதேய நாடுகளுடன் வாணிபம் செய்து பொன்னும் மணியும் கொணர்ந்தார் என்றெல்லாம் சங்க ஏடுகள் சான்று பகர்கின்றன. வேற்று நாட்டு பொற்காசுகள் நம்நாட்டில் கண்டெடுக்கப் பட்டு சென்னை பொருட்காட்சிசாலையில் இருப் பதும் ஒரு ஆதாரம் ஆகும் என்கிறார் பெரியோர்.

**கடவுள் வாழ்த்து:**

முதன் முதலில் கதிரவனையே கடவு ளாக வணங்கினார்கள் என்பதற்கு "ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்" —இச் சிலப்பதிகார அடிகள் சான்றாகும், இன்னும் உண்டு ஈண்டுவிரிப்பின் பெருகும் என விடுத் தேன்.

இவ்வாறு தமிழகத்தார் வெற்றிக்கொடி நாட்டிய காலத்தில் ஆரியர் புகுந்தார் தமிழ கத்தில் இவர் எங்கிருந்து போந்தனரோ தெரியவில்லை. ஆனால் ஆடுமாடு மேய்த்துக் கொண்டு இந்தியா வந்தவர்கள் என்பது மட்டும் உறுதி. இவர்களுடைய மொழி "சமஸ் கிருதம்" என்பது. இது வடக்கில் வழங்கப் பட்டதால் வடமொழி என்றார், இம்மொழியில் ஒருசில வேதங்களே உள. வடமொழி பேச்சு வழக்கில் இருந்ததாக இதுவரை எவரும் சான்றுடன் கூறல் இயலாது எனவே "ஆரியம் போல் வழக்கு அழிந்து ஒழிந்து" என்றார் பேராசிரியர் சுந்தரம்பிள்ளையவர்கள் இவ்வாரியர் எப்படியாவது தங்களுடைய பழக்க வழக்கங்களையும் மொழியையும் தமிழ கத்தில் புகுத்த திட்டமிட்டு செயலில் ஈடுபட்ட னர். அந்தநேரத்தில். ....

தமிழகத்துமக்கள் பலபகுப்பாகப் பிரிந்து வாழத்தலைப்பட்டனர். ஒரு பகுப்பார் கேரளம் திருவிதாங்கூர் பகுதிகளுக்குச் சென்றுவாழ்ந் தனர், வேறுபகுப்பார் திருப்பதிக்கு வடக்கே வாழத்தலைப்பட்டனர், வேறு சிலரும் அப்ப டியே. அவர்கள் முறையே மலையாளிகள், ஆந்திரர்கள், கன்னடர்கள் என இன்று அழைக்கப்படுகிறார்கள். இவ்விதம் தனித்தனி யாக வாழ்ந்த மக்களிடம் சென்று ஆரியர் தங் கள் திறமைகளைக்காட்டினர். அவர்களில் ஆரியர் வலையில் அதிகம் அகப்பட்டவர் மலை யாளிகளே .ஆங்கிலேயர் இந்தியாவுக்கு வந்த பொழுது இந்தியாவிலுள்ளவர்களுடன் உற வாடியதால் "ஆங்கிலோ இந்தியன்" என்ற புது சாதியார் உண்டானதுபோல தமிழர்க ளுக்கும் ஆரியருக்கும்பொதுவாக "மலையாளி" ஆனார், இவர்களை நம்மவர் என்று எங்ஙனம் கூறுதல் இயலும். அவர்தான் அங்ஙனம் கூறவிடுவார்களா?

பின் ஆரியர் வருகையை ஒட்டி "களப் பிரர்" என்ற பகுப்பார் தோன்றி ஆரியரைப் பின்பற்றி தமிழரை அழிகக முயன்றனர் ஆயினும் பல்லவர் தோன்றி களப்பிரர்களை வேரோடு பிடுங்கிஎறிந்தனர். பல்லவர் காலத் தில் அப்பர் சம்பந்தர் தோன்றி சைவமதத்தை வளர்க்கத்தலைபட்டனர். ஆயினும் சமணர் என்ற மதத்தார் சைவமதத்தை அழித்து ஒழிக்க முயன்றும் பயனற்றுப்போய் அவரும் சோர்ந்தார். ஆரியர்கள் மட்டும் தம் சூழ்ச்சி யினை ஓயாது ஒழியாது செய்துகொண்டே யிருந்தனர், அப்பொழுது ஆரியத்திற்கு எதி ராக தமிழுக்கு உதவியாக புத்தமதம் தோன் றியது. ஆரியத்தை எப்படியும் தமிழகத்தில் பரவாதபடி தடுகக புலவர் பலர் புத்தமதத்தில சேர்ந்தார். இப்படியிருக்கும்பொழுது ஆரியத் துக்கு உதவியாக சைனர் என்ற பகுப்பார் கிளம்பினர். ஆரியரும் சைனரும் சேர்ந்து புத்தமதம் தமிழகத்தில் தலைகாட்டாதபடி அழித்து ஒழித்தனர். தமிழர் மட்டுமே மொழித்

துறையில் போராடி வந்தனர். சைனர்கள் தம் கருத்துககளை "மணிப்பிரவாளம்" என்ற மொழியில் . எடுத்துச்சொல்லத் தலைப்பட்டனர், அம்மொழியில் பாதி வடமொழி பாதி தமிழ்மொழி கலந்தது இப்படி அவர்கள் செய்த செயலில் தமிழன்னையின் உயிர் சிதறடிக்கப்பட்டது ஐயகோ! நம்மொழி எத்தனை தூய தமிழ்ச்சொற்களை இழந்துவிட்டது இக் கொடுமை நெஞ்சம் படைத்தோரால்.

இதோடு ஒழிந்ததா தமிழர்களுக்குத் தொல்லை! இல்லையில்லை பல ஆண்டுகளுக்குப் பின் முகமதியர் படையெடுப்பு தொடங்கியது அவர் வென்று வந்த நாடுகளில் எல்லாம் தமிழர் அனைவரும் முகமதியர் ஆக்கப்பட்டார். தமிழ் நூல்நிலையங்கள் பல கொளுத்தப்பட்டன குர்ரான் புகுத்தப்பட்டது. இவர்களால் அழிக்கப்பட்ட நூல்கள் பற்பல, இவர்கள் காலத்து தமிழ்நூல் வெளிவரமுடியாதபடி மறைந்து கிடந்ததால் கறையான்களின் கொடுமைக்குப் பலியானவை அதனினும் பல.

அடுத்து ஆங்கிலேயர் நம்நாட்டில்புகுந்து நாடகமாடத்தலைப்பட்டனர். ஆங்கிலம் படித்தவருக்கே வேலை என்றனர். வயிற்றுப் பிழைப்புவேண்டி ஆங்கிலம் பயின்றூர் தமிழர் பெரும்பாலோர் ஆங்கிலம் பயின்ற தமிழர்கள் ஆங்கிலத்திலேயே பேசினல் தாம் சுவர்க்கத்தையே கணடுவிட்டதாக எண்ணியெண்ணி மதிதேய்ந்தார். இககொடுமதியாளர்களையும் பின்பற்றினர் கல்லாதமக்களும். நம்மக்கள் அடிக்கடி பயன்படுத்தும் சொற்களாக ரெடி [Ready] சார் [Sir] குயிக் [Quick] போன்றன வழங்குகிறது. இங்சொற்களால் தூய தமிழ்சொற்களான ஆயத்தம், ஐயா, விரைவுபோன்றனஅழிந்து ஒழியப்பார்த்தன.

அடுத்து வடமொழி கலப்பைப்பார்த்தால் நெஞ்சம கொதிக்கும். இம்மொழி நம்மொழியில் கலந்ததால் எண்ணற்ற செந்தமிழ் சொற்கள் செத்தும உருததெரியாதவாறும் ஆயின. ஒருபானை சோற்றிற்கு ஒருசோறு பதம் பார்ப்பதுபோல் இரண்டொரு எடுத்துக்காட்டுகள் பார்க்கலாம். நட்சத்திரம், கஷ்டம், சுத்தம், அசுத்தம், ஜலம் போன்றன அடிக்கடி நம்மால் பயன்படுத்தப்படுவன. இவற்றிற்கு நல்ல தமிழ்ச்சொல் பலருக்குத் தெரியாது. இங்ஙனம் கூறினேன் என வருந்தவேண்டாம் நீக்கள் பலரிடம் இச்சொற்களைக கூறி தமிழ் சொற்கள் யாது என வினவின் அப்பொழுது நன்கு புலனுகும், இவற்றை எண்ணும்பொழுது கொடுந்தன்மையுடையான் தமிழ் அன்னையின் உறுப்புக்களை அணுவணுவாகச் சிதைத்தான்என்ருல மிகையாகாது. அதையும் கண்டு அவள் வயிற்றில் பிறந்த நாம் நன்று! நன்று!! என்று சொல்லி அவனுக்கு ஊக்கம் ஊட்டியவர்களாக வாழ்நது வருகின்ருேம். என்று இந்தநிலை ஒழியுமோ அன்றுதான் சங்கத்தாயின் அழுகைககண்ணீர் நீங்கி உவகைக்கண்ணீர் வழியும். அவ்வடமொழிச் சொற்களுக்குத் தமிழ் சொற்கள், உடு விண்மீன் போன்றன நட்க்ஷத்திரத்திற்கும், இன்னல் என்பது கஷ்டத்திற்கும், தூய்மை என்பது சுதததிற்கும் அழுககு என்பது அசுத்தத்திற்கும் (அழுக்காறு அவா வெகுளி-குறள்) நீர் என்பது ஜலத்திற்கும் சால்புடைத்தாம்.

இனி உருவு திரிந்து காணப்படுவனவற்றில் ஓரிரண்டு பார்ப்போம். ஆத்து, வேஷ்டி, காடக்ஷி போன்றன பலவாம். அகம் என்பது இல்லம், வீடு, எனப்பொருள் தருவது. அகம் என்பது நாளடைவில் அம்மாமி பாடையில் ஆத்து என ஆயது. பல வேட்டிகளை ஒன்ருக நெய்து தனித்தனியே வெட்டி எடுககப்படுவதால் வேட்டி எனப்பெயராயது. இது அறியாது தனவந்தர் "வேஷ்டி ரெண்டுஜோடி" என்பதைக் காணலாம."காண்" என்னும் தொழிற்பெயரோடு "சி" என்னும் தொழிற்பெயர் விகுதி சேர்ந்து காட்சி என்று ஆயது. இச்சொல்லை இன்றும் படக்காட்சி நிலையத்தாரில் பலர் "காட்க்ஷி" உண்டு என்றே எழுதி விளம்பரம் செய்கின்றனர். இவ்விதம் செய்வதாலும் வேறு சொல்லைப் பயன்படுத்துவதாலும் நம் மொழியே அழியும். இக்கருத்தை "நம்மொழியில் பல சொற்கள் இருக்க, பிற மொழிகளைப் பயன்படுத்துதல் நம்மொழியை அழிப்பதாகும்" என்றுகூறி

விலியுறுத்துகிருர் திரு ந. சி. கந்தையா பிள்ளையவர்கள். இவ்விதமாக நம்மவர் நிலை மிகமிக அவலநிலை அடைந்துள்ளது. மக்கள் மட்டுமன்று மொழியும். மொழிமட்டுமன்று மொழி வழங்கும் நாடும் கூனிக்குறுகி காட்சி யளிக்கின்றது. என் செய்வோம் தமிழர்காள்!

வயிற்றுப்பசி தீரவேண்டி அழும் குழந்தைக்கு தாய் நிலவின் வடிவுகாட்டி சிறிது அழுகையை நிறுத்துவதுபோல் "தமிழ் ஆட்சி மொழி" என்பதைத்காட்டி அரசியலார் தமிழர் உள்ளத்து உவகை பூக்கச்செய்தனர். ஆனல் உண்மைபசி தீரவேண்டுமே! தமிழ்மொழிக்கு ஆக்கங் கொடுப்பது சங்க காலத்து மக்களின் வாழ்க்கை நிலையை அடைய வழிகாட்டுவது போலாகும். தமிழ் மொழியை வளர்ப்பதும் மொழி இலக்கியங்களைப் பயிலச்செய்து அதற்குத்தக நிற்கச் செய்வதும் அரசியலார் காட்டும் ஆதரவையும் மக்களின் உணர்வையும் பொருத்திருக்கிறது என்ற உரையோடு இதனை முடிக்கிறேன்.

வாழ்க தமிழினம்!

வாழிய சங்கத் தமிழ் மூன்றும்!!

---

## 8-ம் பக்கத்தொடர்ச்சி

துயர் போகவில்லை. அதனல் தமிழ் அன்னையின் பிள்ளைகளாகிய இலக்கியங்களை வளர்த்து உலகப்புகழ் அடையச்செய்யவேண்டும்.

தமிழாகிய ஆற்றில் இலக்கியங்களாகிய ஊற்றுக்களைத் தோண்டும்படி பெரும்அறிஞர்களை ஊக்கப்படுத்த வேண்டும். அந்த இலக்கிய நூல்கள் பண்டைய நூல்களைப்போல் என்றும் மக்களின் வாழ்க்கைக்குப் பயன் படக்கூடியதாக இருக்கவேண்டும். அரசியலாரும் சிறந்த நூல்களுக்குப் பரிசும், வாழ்க்கையில் வறுமை அடைவோருக்கு பொருள் உதவியும் கொடுத்து, பல அறிஞர்களைத் தோற்றுவிக்க வேண்டும்.

தமிழாகிய ஆற்றை ஆழப்படுத்தியும் அகலப்படுத்தியும் உலகமே உயர்ந்த மொழி எனக்கருதும்படி அரசியலார் ஆவன செய்ய வேண்டும். தமிழ் அன்னையின் தவப்புதல்வர்களாகிய நாம் மேலும் பலஅறிஞர்களையும் அவர்களால் சிறந்த நூல்களையும் உண்டாக்க எங்கும் நிறைந்த இறைவனை

இறைஞ்சுவோம்.

---

## 9 ம் பக்கத்தொடர்ச்சி

கொடுத்தும் தூங்கச்செய்கிருர்கள் இது மிகவும் தவறு.

தூக்கமின்மையினல் அவதியுறும் குழந்தைகளுக்கு சமோ மில்லா [Chamomilla-30] என்ற மருந்தை எடுத்து பாலில் இரண்டு சிற்றுண்டையைப் போட்டு கரைத்து தினம் ஒருமுறையாக இரண்டு அல்லது மூன்று நாட்களுக்கு மட்டும் கொடுக்கலாம்.

### தலைமயிர்உதிர்வதைத்தடுக்கஎன்னவழி?

கேசம் உதிருவதைத் தடுக்க தூ ஜா ஆக்ஸிடெண்டாலிஸ் [Thuja occideutalis 12] என்ற மருந்தை பெரியவர்களாயின் தினம் நான்கு சிற்றுண்டைகளும் சிறியவர்களாயின் அதில்பாதியுமாக (இரண்டுசிற்றுண்டையாக) தினம் மூன்று முறை சாப்பிட்டு வரவும். தலைக்குஆர்னிகா ஹேர் ஆயிலை (Arnica Hair oil) தடவிவரவும். எண்ணெய் ஸ்நானம் செய்யும் பொழுது சுமார் 15நிமிடத்திற்குத் தலையில் இந்த எண்ணையை ஊரவைத்துப் பிறகு கஞ்சியின் மூலம் எண்ணையைப் போக்குவது மிகவும் நலம்.

# ★ உழவர்க்கு ஒருசொல் ★

**பாரததாசன் - சி. வெ. ரா.**

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற் றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்" என்ருர் வள்ளுவர்.

"ஏற்றம் உழுதுண்டு வாழ்வதற்கொப் பில்லை கண்டீர் பழுதுண்டு வேருர்பணிக்கு" என்பது நாலடியார்.

"உழவுக்குந் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்" என்ருர் பாரதியார் சங்ககால முதல் இன்றுவரைப் புலவர். பெருமக்கள் போற்றி வருகிற தொழில் உழவுத்தொழில். 'சுழன்றும் ஏர் பின்னது உலகம்' என்றபடி அந்த ஏரின் பின்னதாகவே மற்றெல்லா தொழில்களும் அமைந்து இருக்கின்றன. நம்நாடு விவசாயநாடு, தொன்றுதொட்டே நாகரீகம் தோன்றிய காலந்தொட்டே உழவினைப் போற்றி வளர்த்தநாடு, பொன்னியின் வளத்தோடு மண்ணின் கொழிப்பையும் வழங்கும் நம்நாடு! வேற்றுநாட்டரசர்க்கும் வாரி வாரி வழங்கி வள்ளல் தன்மை பெற்ற நாடு! தமிழ்நாட்டின் நெற்களஞ்சியம் என்று பெயர்பெற்றதஞ்சையின் பெருமைமிக்க நாடு! இந்தநாடுதான் இன்று மற்றநாட்டிற்கு 200 கோடி ரூபாய் உணவு இறக்குமதிக்காக கொடுக்கின்றது! தொன்று தொட்டு விவசாயத்தில் ஊறி வளர்ந்த இந்தியா, இன்று பிற நாட்டின் கையை எதிர்நோக்குகிறது? ஏன்?

நம் நாட்டின் ஜனத்தொகை 36கோடி இங்கு நெல் சாகுபடியாகும் நிலத்தின் விஸ்தீரணம் 7,40,00,000 எக்கர்.. இதில் உற்பத்தியாகும் தானியம் 2,30,00,000டன்கள்....சராசரி ஏக்கருக்கு 800பவுண்டு தானியமே கிடைக்கின்றது, நமக்குத் தேவையான உணவோ 4,00,00,000டன்கள் பற்ருக்குறைகாக பத்து சதவிகிதம் தானியம் வெளிநாட்டிலிருந்து வரவழைக்கப்படுகிறது. அது விழுங்குகிறது 200கோடி ரூபாய்!

இதுபற்றி நாம் கவலைப்படுவதில்லை. இதுபற்றித் தெரிந்து கொள்ள விரும்புவதுமில்லை. நம் நாட்டில் வளமுள்ள நிலமில்லையா? அல்லது உழைப்புத்திறன்தான் குறைவா? பாசனவசதிக்கும் பஞ்சமில்லையே! வஞ்சனையின்றி வாரிவழங்கும், பொன்னி, கிருஷ்ணு, கோதாவரி, கங்கை, பிரம்மபுத்திரா மற்றும் சிந்து போன்ற நதிகள் இருக்கின்றனவே! பின் ஏன் பற்ருக்குறை? எல்லாவசதிகளுமிருக்கின்றன. ஆனுல் உற்பத்திஇல்லை? ஏன்?

இந்தியாவில் ஆண்டு ஒன்றுக்கு 42லட்சம் குழந்தைகள் பிறப்பதாகக் கணக்கெடுத்துள்ளனர். இன்றைய ஜனத்தொகைகே விளைவு காணவில்லை யென்கிறபோது இந்த ஜனப்பெருக்கத்திற்கும் நாளை ஈடு கொடுத்தாக வேண்டுமே! அதுபற்றியாவது நாம்சிந்தித்தோமா? கல்வி வளர்ச்சி குறைவு என்பது ஒருபுறமிருக்க, தெரிந்தவர்கள் சுயநலத்தால் பிறற்குச்சொல்லாதிருத்தல் என்கிற ஒரு பெருங்குறையும் நம்நாட்டிலிருப்பதே காரணமுமாகும்! இது உணர்வதற்கே வழிவகுத்த முறை ஒன்று அரசாங்கத்தால் செயல்முறையில் பயன் படுத்தப்பட்டு பரிட்சார்த்தமாக வெற்றி கண்டுவருகிறது.

பரிட்சார்த்தமாக ஜப்பானிய முறைகள் நம்நாட்டு வளப்பத்திற்கும் பழக்க வழக்கங்களுக்கும் ஒத்து வந்திருப்பதாகக் கண்டுபிடித்திருக்கிருர்கள், 1952ம் வருடத்தில் மேற்கு வங்காளத்தில் பரிட்சைசெய்து பார்த்ததில் ஒரு ஏக்கருக்கு சாதாரண சாகுபடியில் 52மணங்கும் ஜப்பானிய சாகுபடியில் 76மணங்கும் கிடைத்திருக்கிறது.

இங்குள்ள விளைவிற்கும் ஜப்பானிய விளைவிற்கும் மூன்றுமடங்கு வித்தியாசமிருப்பதாகக் கணக்கெடுத்திருக்கின்ருர்கள்.

16-ம் பக்கம்பார்க்க.

# உரிமை முழக்கம்
# அதன் தேவையும்—சேவையும்

**R. வீரபத்திரன்.** M. A. L. T., தமிழ்ப்பேராசிரியர்,
பல்கலைக்கழகக் கல்லூரி, திருவனந்தபுரம்.

"யாதும் ஊரே; யாவரும் கேளிர்" என்பது சங்ககாலத்தமிழன் கண்ட இலட்சியம். இது ஓர் இலட்சியம் மட்டுந்தான், கைகூடிய அனுபவமாகக் கருதமுடியவில்லை. ஆயினும் இத்தகைய ஓர் உன்னத நிலையை இலட்சியமாகவேனும் கண்டது தமிழனது பெருமைக்குச் சான்ருகும். இந்த இலட்சியம் உயர்ந்த பண்பாட்டின் அடிப்படையில் எழுந்ததாகும்.

சில நூற்ருண்டுகள் கழிகின்றன. அதே இலட்சியகுரல் புதிய வடிவத்தில் மீண்டும் ஒலிக்கக்கேட்கிருேம். "ஒன்றே குலம்: ஒருவனே தேவன்" என்பதே அப்புதிய குரல். இதனைத்திருமூலமுனிவர் சமயத்தின் அடிப்படையில் திருமந்திரத்தில் முழங்குகிருர்.

சங்கத்தமிழன் உரைத்த இலட்சியம் அவன் வாழ்ந்த தமிழ்நாட்டிலேயே திருமூலர் காலம்வரையிலும் கைகூடவில்லையா! என்று உள்ளம் ஏங்குகிறது. இனியாகிலும் நிறைவேருதா என்று எதிர்காலத்தில் நம்பிக்கை கொள்கிறது.

ஆண்டுகள் நூற்ருண்டுகளாகச்சுழன்று ஓடுகின்றன. இருபதாம் நூற்ருண்டு பிறக்கிறது.அதில் புரட்சிக்கவிஞன் பாரதிதலையெடுக்கிருன் அவன் மக்கள் வாழ்க்கையில் பழமையைமாய்த்துப்புதுமையைத்தோற்றுவிக்க வீறுகொண்டெழுகிருன், அவனும் ஓர் இலட்சியத்தை நம் கண் முன்னே வைக்கிருன். "எல்லோரும் ஓர் இனம்; எல்லோரும் ஓர் நிறை" என்பதே அவன் கூறும் இலட்சியம்.

பாரதி கூறுவதும் பழைய குறிக்கோள் தான். சொற்கள் மட்டும் வேருக உள்ளன அப்புரட்சி வீரத்துக்கும் கூட இரண்டாயிரம் ஆண்டுகளாகக் கூறப்பட்டுவந்த அப்பழைய இலட்சியத்தையே மீண்டும் கூறவேண்டியிருந்தது. தேசப்பற்றுடைய பாரதி அந்த இலட்சியத்தை தேசீயத்தின் அடிப்படையில் உணர்த்துகிருன்

இங்கே நாம் சிந்திக்கவேண்டியது ஒன்றுண்டு. சாதிகள் ஒழிந்து மக்கள் ஒன்றுபடவேண்டும் என்ற ஒரே இலட்சியமே இரண்டாயிரம் வருடங்களுக்கு முன் தொடங்கி இன்றுவரை ஒவ்வொரு காலப்பகுதியிலும் வாழ்ந்த மேன்மக்களால் வெவ்வேறு நிலைகளிலிருந்து வற்புறுத்தப்பட்டு வந்துள்ளது. இதிலிருந்து குலம், குடி, இனம், வகுப்பு இவைபற்றிய உணர்ச்சிகளை மனிதஉள்ளத்திலிருந்து அகற்றுவதன் அருமைப்பாடு நன்கு புலனுகிறது, அவ்வேற்றுமைகள் மனித உள்ளத்தின் இயற்கை உணர்ச்சிகளான ஆசாபாசங்களுடன்பின்னிப்பிணைந்து கிடப்பதால் அவற்றை முற்றிலும் களைந்தெறிதல் எளிதன்று. எனவே, இப்பொழுதுள்ள சமூக அமைப்பை அங்கீகரித்து, குறுகிய வகுப்புணர்ச்சியால் வரும் தீமைகளைப்போக்கில் பரந்த நோக்கத்தில் அதனைச்சீர்திருத்தி அதன்வாயிலாக மனித இனத்திற்கு நன்மையை உண்டுபண்ண முயல்வது அறிவுடைமையாகும்.

இவ்வணம் கூறியதால் வகுப்புணர்ச்சிக்குக் கோயில்கட்டிக் குடியிருத்தி வழிபடவேண்டும் என்றுகூறுவதும்ஓர்இலட்சியமே.

இந்த இலட்சியத்தைத்தாம் அடைவதற்காகவும் மக்களை அந்த இலட்சியப்பாதையில் அழைத்துச்செல்வதற்காகவும் பல ஞானிகள் தமது வாழ்க்கையையே அர்ப்பணம்செய்துள்ளார்கள், அந்த ஞானிகள் தமது முயற்சியில் எந்த அளவு வெற்றிபெற்றுள்ளார்கள் என்பதை மதிப்பிடுதல் அரிதாம், அவர்கள் தனி

முறையில் இலட்சியத்தை அடைந்திருக்க லாம்; அல்லது அணுகியிருக்கலாம, ஆனுல் பொதுமக்கள் அந்த இலட்சியத்தின் அருகில் கூடச்சென்றிருக்கமாட்டார்கள்; அதன் முழு வடிவத்தை தரிசித்தே இருக்கமாட்டார்கள். ஆயினும, அந்த ஞானிகள் காட்டிய இலட்சியம் இன்றும் மககள் கண்முன் கலங்கரை விளககமாக ஒளிவீசிக்கொண்டிருக்கிறது.

அந்த ஞானிகளின் தியாக வாழ்வால் சமூகம் இன்று நாம் வாழ்வதற்குத் தகுதியுடையதாக இருக்கிறது. அத்தியாகவாழ்வு நிகழந்திராவிடில், சமூகம் சாதிவெறி என்னும் முள் அடர்ந்து காடுபிடித்து வஞ்சகம், சூது, கொலை ஆகிய வனவிலங்குகள் பெருகி நன்மக்கள் வாழ்வதற்கில்லாதபடி ஆகியிருக்கும்எனவேஅத்தியாகிகளின்அடிசசுவட்டைப் பின்பற்றிச் சமூகத்திலிருக்கும் வகுப்பு வேற்றுமைகளை அகற்றி மக்கள் அனைவரும் சமத்துவநிலை அடைய முயல வேண்டுவது ஒவ்வொருவரது கடைமையாகும், அக்கடமையும் முற்போக்கடைந்துள்ள சமூகத்தார்க்கேஅதிகமாக உள்ளது.

அந்த இலட்சியம் கைகூடும்வரையில் இப்பொழுதுள்ள வகுப்பு வேற்றுமைகள் காணப்படுதல் இயற்கை. அவை இருக்க வேண்டுவதும் ஒருவகையில் அவசியம்என்று கூடத்தோன்றுகிறது அவை மனித சமூகத்திலுள்ள பல பிரிவுகளுக்குள்ளே ஒற்றுமையை உண்டுபண்ணியிருககின்றன. முன்னேற்றத் துறைகளில் மக்களை அழைத்துச் செல்வதற்கு இவ்வொற்றுமையை நன்கு பயன்படுத்த வேண்டும்,

மேலும் இந்திய சமூகம் கோடிக்கணக்கான மக்களைக்கொண்டது, எந்த முற்போக்குத் துறையில் உழைப்பதற்கும் சமூகம் சிறு சிறு பிரிவாகப்பிரிந்து ஒற்றுமையுடன் இயங்குதல் வேண்டும். நீளமான இரும்புக்கம்பி அந்தநிலையில்அதிகமாகப் பயன்படுவதில்லை. அதனையே சிறுசிறு துண்டுகளாகவெட்டி வளையமாக வளைத்து ஒன்றோடொன்று இணைத்து ஒருதொடராகச் செய்யும்பொழுது எதத்னையோ காரியங்களுக்குப் பயன்படுகிறது. அதுபோலவே சமூகம் வலுவுடைய சிறுபிரிவுகளாகப் பிரிந்து ஒன்றோடொன்று இணைந்து இயங்குவதும் நாட்டின் பொது நலத்திற்கு அவசியமேயாம். ஆனுல் அப்பிரிவு இன்றைய சாதி அடிப்படையில் அமைதலாகாது. பொருளாதார சமத்துவத்தின் மீது புதிய முறைகளில் அமையவேண்டும். அப்பிரிவு எல்லாத்துறைகளிலும் மக்கள் முன்னேறுவதற்கு உதவியாக இருக்கவேண்டும். இப்போதுள்ள சாதிகள்போல மக்களைச் சமூகத்தில் நிரந்தரமாகப் பிரித்துவைத்து உயர்வு தாழ்வு கற்பித்து வேற்றுமை படுத்தல் ஆகாது.

அந்தப்பொற்காலம் வரும்வரையிலும் இப்பொழுதுள்ள சமூக அமைப்பைப் பாதுகாப்போம, பழுதுபார்த்து சீர்படுத்துவோம், அறியாமையையும் மூடப்பழக்க வழக்கங்களையும் அகற்றுவோம், வறுமையையும் துன்பத்தையும் போக்குதற்காகத் தொழில்துறைகளில் முற்போக்கடையப் பாடுபடுவோம். இவ்வகை முயற்சிகளால் பின்தங்கிய சமூகங்களை முன்னேறச்செய்யலாம்.

"வகுப்புணர்ச்சியும், சாதி இனம்பற்றிய ஸ்தாபனங்களும் பிற்போக்குடையன; அவை இருத்தல்ஆகா"என்றுயாராவதுசொல்வதாக இருந்தால் ஒன்றில் அவர் இலட்சியவாதியாக இருக்கவேண்டும், அல்லது முற்போக்கெய்திய வகுப்பைச்சார்ந்த சுயநலவாதியாக இருககவேண்டும்; இலட்சியவாதியைப்பற்றிக்கவலையில்லை. ஆனுல் சுயநலவாதிகளைக் குறித்து எச்சரிக்கையாக இருக்கவேண்டும்.

பலகண்ணிகளைக்கொண்ட சங்கிலித் தொடரின்பலம் அதிலுள்ள தேய்ந்துபோன கண்ணியைப்பொறுத்துள்ளது. அக்கண்ணி இற்றுபபோய்விட்டால் மற்றக்கண்ணிகள் பலமாய் இருந்தாலும் சங்கிலி பயன்படுவதில்லை. "அதுபோல ஒன்றுபட்டு செயலாற்ற வேண்டிய இந்தியசமூகத்தில் ஏதேனும் ஒரு வகுப்பு கல்வி, தொழில், பொருளாதாரம், நாகரிகம் முதலியவற்றில் குன்றியிருந்தால் அது நாட்டின் முற்போக்கிற்கே தடை விளைத்துவிடும். எனவே, எந்த வகுப்பும்

முன்பக்கத்தொடர்ச்சி

பலங்குன்றியிருக்கிறதென்பதைக் கண்டறிந்து அதனைப்பலமுடையதாகச் செய்வது அரசாங்கத்தின் கடமை. முற்போக்கெய்தியுள்ள பிற சமூகங்களுக்கும் அது ஒருகடமையாகும். பின்தங்கிய அவ்வகுப்பினர்க்கோ மற்றெல்லாரையும்விட அக்கடமை அதிகமாக உண்டு.

எனவே பின்தங்கிய வகுப்பினரின் தலைவர்கள் தமது சமூகத்தைச்சார்ந்த இளைஞர்க்கும், வயதுவந்தவர்களுக்கும், ஆண்களுக்கும், பெண்களுக்கும் முற்போக்கு நெறிகளை விளக்கிக்காட்டுதல் வேண்டும். பொதுக்கூட்டங்கள், மாநாடுகள் இவற்றைக்கூட்டி சமூகத்தவரிடையே விழிப்பை உண்டு பண்ணி அவர்களைச் செயல்புரியத் தூண்ட வேண்டும் இளைஞர்களுக்குச்சமூகத்தொண்டு புரிவதற்கான பயிற்சி அளித்துப் பின்பு பொதுநலச்சேவையில் ஈடுபடுத்தவேண்டும்.

இவ்வாறு மக்கள் உள்ளத்தில் சமூக உணர்ச்சியை எழுப்பி முன்னேற்றச்செய்வதற்குப் பத்திரிகையின் உதவி அளவிற்கரியதாகும். அம்முறையில் சமூகத்தொண்டு செய்து, அதன்வாயிலாக நாட்டுக்கு நலம் புரிய வந்த பத்திரிகையே உரிமைமுழக்கம்.

ஒரு சமூகப்பத்திரிகை அந்த சமூகத்தவரால் மட்டும் ஆதரிக்கப்படுதல் போதாது, பின்தங்கிய ஒரு வகுப்பை எதிர்நோக்கியிருக்கும் பிரச்சனைகள் அவலநிலையிலுள்ள ஏனைய வகுப்பினரையும் நேரிடுவனவாகும். எனவே உரிமைமுழக்கத்தில் பின்தங்கிய சமூகங்கள் ஒவ்வொன்றும் தத்தம் உரிமைகளும் முழங்கப்பெறுதலைக் கேட்கலாம், அவ்வகையில் அது பின்தங்கிய வகுப்பார் அனைவர்க்கும் பொதுவான ஒருபத்திரிகையாக அமையலாம்; அல்லது அதனை அங்ஙனம் அமைத்துக்கொள்ளலாம்.

**உரிமைமுழக்கம் நீடு வாழ்ந்து**

**நிலைத்த பயன் தருக.**

★

---

13-ம் பக்கத்தொடர்ச்சி

நாமும் அம்முறையைப் பின்பற்றி சாகுபடி செய்தால் இப்போது உழைக்கும் இதே உழைப்பில்—ஏன்—இதைவிடக் குறைந்த உழைப்பில், குறைந்த செலவில் அதிகமாக விளைவிக்க முடியும். நாம் சிந்திக்கவேண்டியதில்லை, சீர்தூக்கிப்பார்த்துஎண்ணிக்கொண்டிருக்க வேண்டியதில்லை. அதனுல் பலன் அதிகம் உண்டு என்பது உள்ளங்கை நெல்லிக்கனியென நன்குதெரிகிறது. இங்குநாம் உழைக்கிறோம்மாடுபோல—இயந்திரம்போல—அதற்கும் அப்பாற்பட்ட சத்துக்களை உரமாக்கி உழைப்பாக்கிபாடுபடுகிறோம், ஆனுல் நாம் ஒரு ஏக்கருக்கு 800பவுண்டு அரிசியே விளைவிககிறோம். ஜப்பானில் 2352பவுண்டுகள். வித்தியாசத்தைப்பாருங்கள்! மூன்று மடங்கு! ஏனிப்படி?

நண்பர்களே! ஹாலந்து தேசத்துக்காரன் 38கால்நடைகளைக்கொண்டு 100ஏக்கர் சாகுபடி செய்கிறுன்—எகிப்து தேசத்துக்காரன் 25கால்நடைகளைக்கொண்டே 100ஏக்கரை சாகுபடி செய்து விடுகிறுன். ஆனுல் இந்தியாவிலோ 67கால்நடைகள் தேவைப்படுகிறது அதேஅளவு நிலம் சாகுபடிசெய்ய! ஏன்? மனித சகதியுடன், மிருக சக்தியையும் நாம் அதிகம் செலவு செய்கிறோம்! ஆனுல். நாம் பற்றுககுறைநாடாக இருக்கின்றோம்! வெட்கம்! வேதனை!

உலக ஜனத்தொகையில் ஏழில் ஒருபங்கு! உலக கால்நடைகளில் பத்தில் ஒருபங்கு! இத்தனை சக்திபடைத்த நாம், இயற்கை வளம் வாய்க்கப்பெற்ற நாம், இன்னமும் கீழ் நிலையிலேயே இருந்தோமானுல், நமக்குப் பருவமழையை இயற்கை அளித்ததும் வீண் தானே!

எனவே, எல்லாரும் எண்ணுங்கள். ஜப்பானியமுறை நம்நாட்டிற்குகந்தது என்பதை ஆராய்ச்சிப்பண்ணைகள் ஆராய்ந்து, வெற்றி

# சரஸ்வதி

'அவீவா'

" அபபா, அப்பா " எனறு அலறிக்கொண்டு ஜெனரல் ஆஸ்பததிரி பதினெட்டாவது வார்டில் இருநது எழுநதாள சரஸ்வதி அபபொழுது அவ ளுடைய காலில் ஒருவிதமான தாங்கமுடியாத வலி அவளைப படுக்கையில் தள்ளியது. அதே சமயம் பக்கததில் நினற நர்ஸ் " உடம்பை அலட்டிக் கொளளாமல படுத்துக் கொள்" என்று கூறி அவ ளைப் படுகக வைத்தாள். சரஸவதி படுத்துக் கொணடு மேலே பாாததாள. மேலே ஒரு மின் சாரக் காறறுடி சுழனறு கொண்டிருந்தது அநத காறறுடியைபபோல் சரஸ்வதியின மனமும பின் நோக்கி சுழல ஆரம்பித்தது.

★★★

சரஸ்வதி ஒரு ஏழை குடும்பத்தில் பிறந்தாள்; அவள் பிறநது ஒரு ஆணடு கழித்து அவள் தாய் வைசூரிகண்டு இநத உலகததை விட்டு அகன்றாள். அந்தச் சமயம அவளுடைய தகப்பனார் அவளை வளாககமுடியாமல் மிகவும கஷ்டபபட்டாா. அதைப் பாாததுக் கொண்டு சுமமா இருக்கமுடியவில்லை பககத்துவீட்டு அம்மாவினல். உடனே சென்றாள் உதவிககு. சரஸவதியை குளிபபாட்டுவது முதல உணவு ஊட்டி அலங்காரம செய்வது வரை அந்த அம்மாள் [பககததது வீட்டு அம்மாள்] செயது வந் தாள். சரஸ்வதியின் தந்தை ஒரு சின்னககடை வீட்டுத்திண்ணையில வைதது அதில்வரும லாபத்தை கொண்டு குடும்பம் நடததினாா. அதைககொண்டு குடும்பம் நடத்த மிகவும கஷ்டபபட்டாா சரஸ்வதி யின தநதை.

இரணடு ஆண்டுகள் உருண்டு ஓடின. அப் பொழுது சரஸ்வதியைக் காபபாற்றுவது அவளு டைய தந்தையையே வந்து அடைநதது. காரணம பக்கத்துவீட்டு அம்மாள் வருவதிலலை உதவிக்கு. சரஸ்வதியின் தந்தை காலையில் ஐநதுமணிககு எழுந்து அனறைக்கு வேண்டிய அளவு சாப்பாட் டை சமைத்து வைததுவிடுவாா. பிறகு அன்று பூராவும் சமைக்கமாட்டார். சரஸ்வதிக்கு தானே உணவு ஊட்டி, குளிபபாட்டி, அலங்காரம செயவார் அலங்காரம் செய்து முடிந்ததும் சரஸ்வதியை கடைக்குத் தூக்கிக கொண்டு போய் வைத்துக் கொணடு வியாபாரம் செயய ஆரம்பித்து விடுவார். பிறகு சாபபாட்டு வேளை வந்ததும் அனறைக்கென்று சமைதது வைதத உணவிலிருநது எடுதது சரஸ் வதிககும் ஊட்டிவிடடு தானும் சாப்பிடுவாா. இவ் விதமாக இரணடு ஆண்டுகள் ஓடின. சரஸ் வதியின தநதை மிகவும் கஷ்டப்பட்டார். காரணம சரஸ்வதியை வளர்ப்பது மிகவும் கஷடமாக இருந ததது கடையில கிடைக்கும் வருமானம் இரணடு பேருக்கும் போதவிலலை. இருந்தாலும் மனம தள ராமல் சரஸ்வதியை பாதுகாததது வநதார்

ஒரு நாள் வழக்கமாக சரஸ்வதியும் அவள தந்தையும் வியாபாரம செய்துக்கொண்டிருக்கும பொழுது ஒரு சூட் அணிநத ஆள் சிகரெட வாங்கு வதற்காக அந்தக்கடைக்கு வநதாா. அபபொழுது சரஸ்வதியைப் பாாத்தார். அநத சூட அணிநதிருந்த மனிதா, ஒருவிதமான இரககம் பிறந்தது சரஸ்வதி யின் மேல அவருககு. உடனே "உங்கள பெணணை எஙகள பளளிக்கு அனுபபுகிறீாகளா படிகக"? என் றார். அதைக்கேட்டதும சூட அணிநத மனிதரை இரக்கமாகபபாாத்துவிட்டு " எனக்கு அவளைப படிக்க வைககவேணடும என்று ஆசைதான். ஆனல் அதற்கு எனனிடம் வசதியில்லை " எனறாா சரஸ்வதியின் தநதை; உடனே " அதைபபறறி நீங கள கவலைபபடாதீாகள். எங்கள பளளி உஙகளைப போல ஏழைகளுக்கு உதவி செயகிறது; ஏழைக குடும்பத்தில பிறந்த பிள்ளைகளுக்கு உணவு, உடை கல்வி ஆகியவைகளை இலவசமாகததநது உதவு கிறது; அஙகேயே வசதியும் உண்டு. நீஙகள ஒன்றும யோசனைப்பணணாமல் உங்கள் பெணணை அழைத் துககொணடு என பின்னால வாருங்கள எனறார் சூட் ஆசாமி. 'நீஙகள் யாா' எனறாா சரஸ்வதியின் தநதை " நான் அஙகு உபாத்தியாயா வேலை பார்க் கிறேன. எனறாா மறறவர். உடனே கடையைப் பூட்டி விட்டு சரஸவதியை அழைததுக் கொண்டு சூட் ஆசாமியுடன் செனறார் சரஸவதியின தநதை. கொஞசதூரம செனறதும் பஸ ஒனறு வந்தது. அதில ஏறிசசெனறாாகள் மூவரும பள்ளியை நெருங்கி யதும " அதோ தெரிகிறதே அதுதான எஙகள பள்ளி " எனறு ஒரு பெரிய கட்டிடததைச் சுட்டிக

காட்டினர் சூட் அசாமி. பள்ளியை அடைந்து பேரா சிரியர் அறையை அடைந்தார்கள் மூவரும். சூட் அசாமி சரஸ்வதியின தந்தையின ஏழ்மையைப்பற்றி எடுத்துச் சொன்னா பேராசிரியரிடத்தில். பேராசிரி யர் சரஸ்வதியின தந்தையைப் பார்த்து " உஙகள் பெண்ணை நாஙகள எங்கள் பளளியில சேர்ததுக் கொளளுகிறோம், ஆனல் எதாவது ஒரு வகுப்பில் தவறினல் உடனே வீட்டுக்குஅனுப்பி விடுவோம்." என்றார். அதற்கு சரஸ்வதியின் தந்தை சம்மதித்தார் பேராசிரியர் சரஸ்வதியின் பெயர், விலாசம், தந் தையின கையெழுத்து எல்லாவற்றையும வாங்கிக் கொண்டு "சரி அழைத்துபபோய முதல வகுப்பில் விடடுவிடுங்கள். இஙகேயே தங்க ஏற்பாடு செய் கிறேன்" என்றார். சரஸ்வதியை கொண்டு போய விட்டு விட்டு அவள தநதை வீடு திருமபினர். அது முதல் சரஸ்வதி அஙகேயே இருநதாள். அவள தநதை மாதம் ஒருமுறை எ தா வ து வாஙகிக் கொண்டு போய் கொடுத்துவிடடு அவளைப்பார்த்து வருவார்.

இவ்விதமாக வருடங்கள் சென்று கொண்டி ருந்தன. வருடம் தவறாமல் ஒவ்வொரு வகுப்பிலும் தேறிவநதாள சரஸ்வதி. அவளுடைய தந்தைக்கு இது சநதோஷததையே கொடுத்தது. இறுதியில் அவள பதினெராவது வகுபபிலும் தோச்சிபெற்றாள். அதுதான் அவள அநதபளளியில் படிககவேணடிய கடைசி வகுப்பு. அதில் தோசசிபெறறதால அவள் அநத பள்ளியைவிட்டு தன தநதையுடன் வெளியில வந்தாள். ஏன என்றால் அதறகு மேல் அநத பள்ளி யில இருக்க அனுமதிக்க மாடடார்கள். சரஸ்வதி இப்பொழுது பருவமங்கையாக திகழ்நதாள். அவள ஏதாவது வேலை கிடைக்குமா என்று அலைய ஆரம் பித்தாள. மேல் படிப்புககுப போக வசதியிலலாத தால அவள இவவிதம அலைய நோநதது. அவள் நடநது செல்லும பொழுது அவளைப்பாாக்காத வாலி பனே கிடையாது; காரணம் அவள் அவ்வளவு அழ காகத்திகழநதாள. அது அவளுககு அடியோடு பிடிககவிலலை. வேலைககாக அலையததானே வேண்டும! ஆகையால அதையெலலாம் பொருட்படுத்தா மல் வேலைக்காக அலைநதாள். சில சமயம் வேலை கிடைக்காமல வீடு திருமபியதும், அவளுடைய தந்தை "என்னம்மா வேலை கிடைத்ததா? எனபார் "இலலையபபா நாள் பூராவும் கால் கடுக்க சுத்தியது தான் மிசசம், எமக்கு யாரப்பா வேலைத்தரபபோ கிறார்கள எனபாள்" சரஸவதி. உடனே சரஸ்வதிக் காக எபபடி எப்படி யெலலாம் கஷ்டப்பட்டார் என் பதை எடுததுச் சொல்வார் அவள் தந்தை. அதை கேட்பதுவும் எப்படியும் வேலைத் தேடிபபிடித்து தன் தநதையைக் காப்பாற்றுவது என்று தீர்மானம செய் துக்கொண்டு படுக்கைக்குப் போவாள். பொழுது விடிந்து எட்டு, ஒன்பது மணிக்கெல்லாம் கிளம்பி விடுவாள் வேலை தேடும் படலத்திற்கு. இப்படியாக ஒரு மாதம் சென்ற பிறகு அவளுக்கு நல்ல காலம் கொஞ்சம் தலைத் தூக்கியது. வேலையும் கிடைத்தது, ஒரு சினிமா தியேட்டரில். அவளுடைய வேலை டிக கட கொடுபபது பெண்களுக்கு. சம்பளம் ரூ. 60 என்று ஒப்புக்கொண்டு அன்று முதல் வேலையைத் தொடஙகினள். அவளுடைய வாழ்க்கை சந்தோஷ மாகத்தான ஓடியது. பத்து நாட்களுககுப்பிறகு ஒரு நாள் வழக்கம்போல் டிக்கட் கொடுத்துவிடடு அறை யில் உட்காாந்திருக்கும் பொழுது அவள் வசிக்கும தெருவிலிருந்து ஒரு ஆள மிக அவசரமாக ஓடிவந்து "உன் அப்பாவுக்கு திடீரெனறு வயிறறு வலி, வலி தாங்காமல் அவதிப்படுகிறார், உடனே கிளம்பு வீட் டிற்கு" என்றான் வந்தவன். உடனே உததிரவின் பேரில வீடு வநது சோநதாள் சரஸ்வதி.

வீட்டில் அடியெடுத்து வைத்ததுவும் "ஐயோ, அப்பா, வலி தாஙக முடியவில்லையே" என்று அல றிக்கொண்டிருநதார் சரஸ்வதியின் தந்தை, அதைப பார்ககச் சகிககாமல் ஓடிப்போய் டாகடா ஒருவரை அழைத்து வந்தாள் சரஸவதி. டாக்டா வந்துப பாாத்துவிட்டு ஒரு மருந்து எழுதித் தந்துவிட்டு போயவிட்டார். அதைப் பார்ததுவும் [மருந்துச் சிட்டை] அபபடியே சினறுவிட்டாள்! காரணம் கை யில் கொஞசமகூட பணமில்லை. எதற்கும மருந்துக கடைக்குப் போயவிட்டு வருவோமெனறு எண்ணி ரஸ்தாவில் கண்ணிற்கு எடடாத தூரம்வரை தெரி யாமல் ஓடி ஒரு திருப்பத்தில் திரும்பினள். அப் பொழுது அங்கிருந்து வநத ஒரு காா அவள் மீது மோதியது! அவவளவுதான அவளுககுத தெரியும்! கண்ணைத் திறநது பார்த்தபொழுது ஜெனரல் ஆஸ் பததிரியில் படுத்திருபபதை உணர்ந்தாள.

"எனனம்மா கால் இப்பொழுது எப்படி இருக் கிறது?" என்றார் அங்கு வந்த டாகடா, அப பொழுதுதான சரஸ்வதி காலைப பார்த்தாள. காலில் ஒரு பெரியக கட்டு ஒன்று போடப்பட்டிருந்தது உடனே டாகடரை இரக்கமாகப் பாாத்தாள சரஸ் வதி. "பயப்படாதீாகள், ஒன்றும் இலலை! ஒரு சின்ன எலுமபு ஒனறில அடி கொஞசம் பலமாகப் பட்டிருக்கிறது! அவ்வளவுதான்! இனனும் பத்து அலலது பதினைந்து நாடகளில சரியாகி விடும்" என்றார் டாகடா. "பத்து அல்லது பதினைந்து நாளா? அதுவரை என் அப்பாவை யார் காப் பாற்றுவது?" என்றாள் உணர்ச்சி வசப்பட்டவளாய "உங்கள் அபபா, அம்மா எங்கே இருக்கிறார்கள்?" என்றார் டாக்டர். 'எனக்கு அம்மா இல்லை.

அப்பா தான் இருக்கிறார். சரோஜினி நாயுடு தெருவில" என்றாள் சரஸ்வதி. சரோஜினிநாயுடுத் தெரு என்றதும் டாக்டரின் முகம் மலர்ந்தது. இருந்தாலும் அதைக் காட்டிக்கொள்ளாமல் "அப்படியா, சரி உடம்பை அலட்டிக்கொள்ளாமல் படுத்துக்கொள்ளுங்கள் நான் அப்புறம் வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சென்றுவிட்டார் டாக்டர். சரஸ்வதி தன் அப்பாவை விட்டு வந்த நிலையை நினைத்து மிகவும் கஷ்டப்பட்டாள். ஆனால் அவளால் அந்த நிலையில் என்ன செய்ய முடியும்? எழுந்து நடக்கவே முடியாமல் துன்பப்பட்டாள்

இப்படி சரஸ்வதி கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில்; அதே சமயம் அவளால் தனியாய் விடப்பட்ட அவள் தந்தை வயிற்று வலி தாங்காமல் துன்பப்பட்டார். அவர் அனுபவிக்கும் துன்பத்தை வாயளவில் ஒவ்வொருவரும் பரிதாபப்படுவதாகக் காட்டிக்கொண்டார்கள். ஆனால் அவருக்கு உதவ எவரும் முன் வரவில்லை உலகமே இன்று இந் நிலையிலேதானே இருக்கிறது. வாழ்கின்றவர்களே வாழவேண்டும். துன்பப்படுகின்றவர்கள் துயரத்தையே சுமக்கவேண்டும். இது இன்றைய சமூக அமைப்பு! வைதீகர்கள் தலையெழுத்து என்பார்கள்! கலைஞர்கள் துன்பப்படுகிறவனைப் பார்த்து ரசிப்பார்கள். கதை எழுதுகிறவர்கள், இதை அடிப்படையாக வைத்து எப்படி தொடர் கதை எழுதலாமெனக் கருதுவார்கள்.

இன்றைய சமூக அமைப்பின் ஊடேதான் ஒரு சன்யாட்சனும், மகாத்மா காந்தி அடிகளும் பிறந்தார்கள். எல்லோரும் உலகத்தில் பிறர் துன்பத்தை தனதாகக்கருதியிருப்பார்களானால் ஒரு காந்தியடிகளுக்கும், சன்யாட்சனுக்கும் இத்தனை புகழ் கிடைக்காதல்லவா? சரஸ்வதியின் தந்தை துன்பப்படுவதைப் பார்த்து, அதை நீக்கவும் அதே தெருவில் பணமும் குணமும் படைத்த ஒரு உத்தமர் வாழ்ந்து வந்ததால் தான் வயிற்று வலி நீங்கி குணமடைந்தார். அந்த உத்தமர்தான் சுந்தரமூர்த்திப்பிள்ளை.

சுந்தரமூர்த்திப்பிள்ளைக்கு, அந்த வட்டாரத்திலே நல்ல பெயர். பெரிய மனிதர். ஆனால் அவரிடமும் ஒரு சில பிடிவாத குணமிருந்தன. அதனால் அவர் தன் பெற்ற மகனுக்கே போதிய ஆதரவு அளிக்கமுடியாமல், அவனும் அவரை விட்டுசசெல்ல நேர்ந்தது.

★ ★ ★

பாலு சுந்தரமூர்த்திப்பிள்ளையின் ஒரே மகன். டாக்டருக்குப் படிதது பட்டம் பெற்றவன். சொந்தமாக மருத்துவமனை யொனறுகட்டி தனது தொழிலை நடத்தத தந்தையின் உத்தரவைக் கேட்டான. பல விஷயங்களில் பெரிய மனிதரான சுந்தரமூர்த்திப் பிள்ளை என்ன நினைத்தாரோ? தெரியவிலலை. கடைசிவரை பாலுவின் கோரிக்கைக்கு இசையவில்லை மறுத்து வந்தார். பாலுவும் தநதையின் செயலைக்கணடு உள்ளம் வெதும்பினான். பல சிநதனைகளுடன் நடமாடும்பிணமாகததான வீட்டில் முடங்கிக் கிடந்தான். ஒரு நாள் காலையிலிருந்தே பாலுவை ஊரில காணவில்லை. "எங்கோ ஓடிவிட்டான் பாலு" நன்றாக படித்த பையன். தந்தையார் அவன் கோரிகைக்கு இணங்கவில்லை அதனால் ஓடிவிட்டான" எனறு அந்த வட்டாரமே பேசிக் கொள்ளுவதை சுநதரமூாத்திபபிள்ளையும் காதுகளில் வாங்கிக்கொள்ளாமலில்லை. பாலு ஊரைவிடடு ஓடியதிலிருந்து அவரின மனதிற்கு ஓய்விலலை. அதனாலேயே உடல் இளைத்துக்கொண்டேவந்தது.

இந்த சந்தாப்பத்தில் சுந்தரமூர்த்திபபிள்ளை தான் சரஸ்வதியின தந்தைக்கு உதவினா. மகனுக்கு இழைத்த கொடுமையை அகற்ற உதவினாரோ என்றுகூட கருத இடம் உணடல்லவா?

சுந்தரமூர்த்தி பிள்ளையின பராமரிப்பிலேயிருக்கின்ற சரஸ்வதியின் தநதை ஒருநாள் தனது மகளின் நிலையையும் எடுத்துககூறினா. சுந்தரம் பிளளையும தனது மகனின் நிலையையும் கூறிக்கொண்டிருந்தார்.

ஆஸ்பத்திரியிலேயிருந்த சரஸ்வதியின் காலும சிறிதுசிறிதாக நல்ல நிலையை அடைந்துவநதது. டாக்டர் சரஸ்வதியை நல்லமுறையில் கவனித்து வந்தார். டாக்டர் கவனித்த கவனிப்பு அன்பாக வளர்ந்து காதலாக மாறியது.

டாக்டர் சரஸ்வதியின் கைநாடித் துடிப்பைத் தான் இவ்வளவு நாட்களும் பார்த்துச சொல்லுவாரே தவிர அவளது மனத்தின் நாடித் துடிப்பு எப்படியென்று அறியவில்லை, அதையறிய துடித்துக் கொண்டிருந்தார்.

அன்று டாக்டா நோயாளிகளைப் பார்த்துக கொண்டு வரும்பொழுது சரஸ்வதியின் படுக்கையின் பக்கமாக வந்து கையைப பிடித்துப் பார்த்துவிட்டு, தன் உள்ள உணர்ச்சியை பொங்கிவடியும் நிலையில் சரவஸ்தியிடம் "நமது கல்யாணம் எப்பொழுது வைத்துக் கொள்ளுவது" எனறாா. சரஸ்வதி முக மலர்ச்சியுடன் "டாக்டர்! தங்களின் பேருதவிக்கு நான் நன்றிசெலுத்துகிறேன். கோரிக்கைக்கும் நான் இசைகிறேன். ஆனால் என் தந்தையைப்பார்த்து விட்டு அதன்பின் அவரின் சம்மதமும் கலந்து செய்வதே நல்லதென நினைக்கிறேன்" என்றாள். இதைக கேட்ட டாக்டர் மகிழ்ச்சியுடன் அங்கிருநது அகன்றார்.

டாக்டர் தன் அறையில் உட்கார்ந்து ஏதோ சிநதனையில் ஆழ்ந்துக்கொணடிருந்தார். அச்சமயம் ஒரு ஆள் விரைவாக வந்து "பக்கத்துத் தெருவில், உள்ள வீட்டில் பெரியமனிதர் மயக்கமாக விழுந்துவிட்டார், மூச்சு பேச்சில்லை" என்று கூறினான். டாக்டரும் மருந்துப் பெட்டியுடன் அந்த வீட்டிற்குள் நுழைந்தார். நோயாளியைப் பார்த்ததும் கல்லாய் நின்றுவிட்டார்.

சிறிது நேரத்திற்கெல்லாம் நோயாளி கண்ணை திறந்து டாக்டரைப் பார்த்தார். "ஆ......! டாக்டர்! டாக்டர்!! என்மகன பாலுவா? பாலு நீ எங்கேயடா சென்றாய்? உன் நினைவே என் உடம்பு கெட்டது, மயக்கமும் ஏறபட்டது என்றார். கொஞ்சம் மனநிலை சரியானவுடன் சரஸ்வதியின் தகபபனாரை டாக்டர் பாலுவுக்கு அறிமுகப்படுத்தினார். அவரது நிலையையும் கூறினார், சரஸ்வதி ஆஸ்பத்திரியிலிருப்பதையும் பாலு அவரிடம் கூறினான். எல்லோரும் சென்று சரஸ்வதியைப் பார்த்து அழைநதுவந்தனர், பாலுவும் சரஸ்வதியும் மணந்துகொண்டனர்.

## உட்காரச் சொல்லுங்க!

அபேட்சகரின் அனுதாபி:- என்னங்க! நம்ம ஆள் தேர்தலிலே நிற்கிறாருங்க!

வாக்காளர்:- அட அடே! எவ்வளவு நாட்களா நிற்கிறாரு, காலெல்லாம் வலி எடுத்திருக்குங்களே! உட்காரச்சொல்லுங்க!

# கனவு பலித்தது

கே. எம். ஸ்வாமி.

நடுநிசி. உலகமே இருட்டுத்தேவதையின் மடியிலே புதைந்துகொண்டிருந்தது.

நெஞ்சிலே விவரிக்கமுடியாத வேதனை... எவ்வளவு முயன்றும அடக்க முடியவில்லை. கடலின கொந்தளிப்பு போல, அலை அலையாக பொங்கியெழுந்த துயரத்தின் நடுவே, இதறகுமேல்கொண்டு, வீட்டில் ஆபீஸ் பைல்களை புரட்டமுடியாது என்ற நிலை ஏறபட்டபின் அமைதியின்றி படுக்கையிலே படுத்தேன். தூக்கம் வரவில்லை... ஏனோ! ஒரே குழப்பம். கண்களை மூடிக்கொண்டு "தூககம், தூக்கம்" என்ற நினைவிலேதான இருந்தேன. வீண்போகவில்லை... கண்ணயர்நதுவிடடேன்.

கலகலவென நகைபபும் சிரிப்பொலியும் கேட்டது! 'சுந்தர்ராமா' எனறு யாரோ என்னை அழைக்கும் குரல்... திடுக்கிட்டேன்... 'பயப்படாதே சுந்தர்' என்றது ஒரு உருவம். என் உடல் நடுங்கிற்று. நீ யார்...... ஏன் சிரித்தாய்...... எப்படிக கேடடேன் என்று எனக்கே தெரியாது நெஞ்சு படபடவென அடித்தது.

உருவம் பேச ஆரம்பித்தது. சுந்தர்... உன் ஆசை மனைவி சரளாவைப பார்... பூர்ணகர்பபிணியான அவள நடுநிசியாகியும் உன் வரவுக்காகவே எதிபாராதது, எதிபாராதது தாழ்வாரத்திலேயே உட்கார்ந்த நிலையிலே கண்ணயர்ந்துவிட்டதைபபார்.

வாழ்வின முகப்பிலே நின்று கோடானகோடி இன்பமகாண துடிதுடித்துக்கொண்டிருந்த அவள உன்னைக் கணவனாக அடைநது என்ன சுகம் கணடாள பேதை... வறுமையும நோயுமசூழ்நது அவளை ஓர் பயங்கர சூழ்நிலையிலே தளளிவிட்டதைபபார்.

அதோ... உன ஆசைக்கோர் மகன்... குழந்தையிலலேயே எனற குடியில் பிறநத குலமகன். ராகவனின அழுகுரல...! அவன் உடல் நிலை வரவர மோசமாகிககொண்டு வருவதைப் பார்த்தாயா...? ஜனனிவேகத்தில் பேததும் அவனை கவனித்தாயா!

உம்... இவற்றையெல்லாம் கவனிக்க உனக்கு நேரம் ஏது...? நீயோ அரசாங்க பைல்பூச்சி. கவர்மெண்டே உன்னாலைத்தான் நடப்பதாகக்கூட உன் நினைப்பு... இரவு வெகுநேரமானாலும் நீயும் உன் ஆபீஸ் பேப்பர்களுமதான், உன்வாழ்வின் லட்சியம் அதுதான் ஏன். அப்படித்தானே சுந்தர்?

படபடவென பேசி ஓய்ந்தது உருவம். கவாந்திருந்த இருளிடையே அமைதி... எங்கும் அமைதி, என்காதிலே சம்மட்டிக்கொணடு அடிபபது போல ஒவ்வொரு வார்த்தையும் எதிரொலித்தது.

அதே உருவம் மீண்டும் பேச ஆரம்பிததது. நீயோ சர்க்கார் சிபபநதிகளின சங்கத் தலைவனுக வேறு இருக்கிருய... பெருமைபடுகிறேன்...! நலல முறையில அரசாஙகம நடைபெற உன்னைபபோன்ற பணியாளாகள்தானே வித்து, விதை எல்லாம்... எனக்கும் தெரியாதது அலல... ஆனல்...

உன் உழைபபிலே வளரும் அரசாங்கம் உன் வாழ்வின் நலனை கவனிக்கிறதா...? இல்லை...! உன உழைப்பிற்கு தகுந்த ஊதியமாவது கிடைக்கிறதா இல்லவே யில்லை... ஆனல நீ மட்டும் ஊதியத்திறகு தகுந்த உழைப்பை ஏன் அளிககக்கூடாது...

ஏனப்பா... பேசாமல் விழிக்கிருய்... உண்மையை கூறிவிட்டேன் என்று ... பயப்படாதே சுந்தர். என்ருவது ஒருநாள் உண்மை வெளிப்பட்டே தீரும்.

"என்னை என்ன செய்யச்சொல்லுகிருய்" என்றேன்.

பரிதாபத்துக்குரியவனே,, கலங்காதே... உன் உள்ளத்திலும், ஆசாபாசஙகள் துளிர் விடாமல இல்லை. ஆனல நீ அந்த ஆசாபாசங்களை வறண்ட பாலைவனத்தில அலலவா பயிருடுகிருய்.

கவனமாகக் கேள்... அன்ெருரு நாள்... நீ வேலை பார்க்கும் காரியாலயத்திலே, நடநத நிழ்ச்சியை எண்ணிப்பார். உன் மனைவி பிரசவ ஆஸ்பத்திரியிலே, உயிருக்கு ஊசலாடிககொண்டிருககும் போது ஆயுதம்போட வேணடும என்று பெரிய டாக்டர் முடிவு கட்டிவிடடாராம். உன்னைப் பார்கக வேண்டும் என்று கதறகிருள் சரளா. உடனே வா என்று உன் மாமனரிடம இருநது வந்த கடிதத்தைக் காட்டி, என் ஆபீஸரிடம் நீ லீவு கேட்ட உனக்கு கிடைத்த பதில் என்ன?

நேரம் பாராமல் இரவு பல மணி நேரம் ஆபீஸ்லே பைல்களை புரடடி, புரட்டி பதில் எழுதிக கொண்டிருந்த உனககு, அநத ஆபீஸர், அந்நிலை

யிலே உன் உள்ளக்கொதிப்பை அறிந்தாரா? அந்நிலையில்கூட... அதன் அதிகாரததிலே.

மிஸ்டர் சுந்தர்ராமன் "பெண்டாட்டி ஆஸ்பத்திரியிலே இருந்தால் உனக்கு எதற்கு ஐயா லீவு! நீ கூட இருந்து பாதி வலியை வாங்கிக்கொள்ள போகிறீரா? அதெல்லாம கவனிக்க டாக்டர்கள் இருக்கிறார்கள்... நீர் போய், இந்த "ஸ்டேட்மெண்டை" இன்னும் அரை மணியில் முடித்துக் கொண்டுவாரும். இது இன்றே இபபொழுதே கவர்மெண்டுககுப போயாகவேணடும்." என்று தான் அதிகாரதோரணையில் கட்டளை இட்டதைத் தவிர, "அரசாஙகபணியே இறை பணி" என்றிருக்கும் உனக்கு கருணைகாட்டினாரா? நீ மட்டும மனைவி, மக்கள். சுறறம், உலகம் இனனதென்றே அறியாமல் செக்கு மாடு மாதிரி உழைககிறாய்... உழைததுககொண்டே இருககிறாய சுந்தா... நீ எப்பொழுது அரசாங்கஉத்தியோகத்தில் அமர்ந்தாயோ அப்போதே "காண்டெக்ட் ரூல்" என்ற சிறையிலே தள்ளப்பட்டு விட்டாய். சட்ட திட்டங்களுக்கு கட்டுபட்டு நடக்கவேண்டும். ஆனால், காலை பதினொரு மணியிலிருந்து மாலை ஐந்து மணிவரையில்தான் வேலை. அதற்கு தகுந்த ஊதியம்... இவ்வளவுதான் என்று நிர்ணயித்திருக்கும்போது, நீ மட்டும், அரசாங்கமே தன்னால்தான் நடபபதாக எண்ணி விடுகிறாய். வாழையடி வாழையாய வந்தத் திருக்கூட்டத்தில் நீயும் ஒருவன். நீ உன் உடல் நலனை மறந்து உன் ஆசாபாசங்களை மறந்து, அரசாங்க நலனே தன் வாழ்வின லட்சியம் என்று அல்லும் பகலும் பாடுபடுகிறாய். நன்றாக பாடுபடு. நீ பணிபுரியும் அரசாங்கமும நம்முடையதுதானே. உன் அரசாங்கத்திடம் நன்றி விசுவாசமுள்ளவனாக இரு. **ஆனால் உன் வாழ்வே தன் வாழ்வாக சர்க்கார் நினைக்கவும் பாடுபடு.** அது உணமையை உணர்ந்

தால், உன் உழைப்புக்குத்தகுந்த ஊதியம் அளித்து விடக் கூடுமல்லவா, பிறகு உன் இருண்ட வாழ் விலே பிரகாசம் தோன்றி விடுமே.

போனதெல்லாம் போகட்டும். உன் வாழ்வில் கிடைதத அனுபவஙகளிலே, நீ தவறு இழைத்து இருநதாலும் இனியாவது நீ திருந்திய மனிதனைக "உன் உரிமைக் குரலே" எழுப்பு. அரசாங்க அலுவலகததினர் எலலோரும் ஓா இனம், ஒரே குடைக்கீழ இருந்து ஆட்சிபுரிந்து வருபவர்கள்" துன்பம்தொடரும் உன்வாழ்வை துண்டு, துண்டாக உடைத்து சாக்கார் உத்தியோகஸ்தாகளின் அவல நிலையை, வறுமைபபேயை ஒழித்து இனபம பெருகும பூஞ்சோலை யாக்கும் கடமை வீரனகவாழ். கடமை தான் தஙக முததிரை. கடமையிலே வெற்றி காண் பாய், கூடிய விரைவில் அந்த பொனனுன நாள் "உன் லடசியம் ஈடேறும் நாள்" வெகு சமீபத் திலேயே இருக்கிறது. உன் உரிமைகருரலை எழுபபு நான் வருகிறேன சுநதர். நான் வருகிறேன் என்று பேசி ஓயந்தது நீ யாா... இளக்காரமாக சிரிக்கிறது. என்னையா கேட்கிறுய் நீயாரென்று. நீதான நான் நான்தான் நீ; மனசாட்சி யபபா... மனசாட்சி. ஆ! மனசாட்சி. என் மனசாட்சி.

என்னபபா ம ன சா ட் சி, மனசாட்சி என்று உளர்றே விடிந்து 9-30-க்குமேல் ஆகிறது. எழுந்திரு சுந்தர், என்று தட்டி எழுப்பினன் என் நண்பன் ஜகநீசன், என் கனவுக்கு முற்றுபுள்ளி வைத்துவிடடான்.

கனறி நண்பரே! மிஸ்டர் சுநதர்!... இன்று முதல் நீ சூப்பிரண்டாக மாற்றபபட்டு இருக் கிறுய். நான் வருமவழியில மானேஜா சப்தரிஷி கூறினுர். அதடுேதாடு நான் மதருஸ்போய் இன்று காலையிலதான வந்தேன். உன் மாமனுரை கண் டேன். உனக்கு பெண் குழந்தை பிறநதிருக்கிறதாம் தாயும், குழந்தையும் சௌககியமெனறு சொல்ல சொனனுர்.

எங்கே எடு காப்பி என்று ஆவலோடு கேட் டான் ஜகநீசன்.

இரவு எல்லாம் என் மூளை குழம்பி இருந் தாலும் என் கனவு பலித்துவிட்டது, என் கனவு பலித்துவிடடது, ஆனுல் என் கடமைதான் பாக்கி. "அதுதான் அந்த உரிமைக் குரல்" என்று என் வாய் முணுமுணுத்துக்கொண்டுதான் இருந்தன.

★ ★ ★

# மூளை வியாதியினுல் தலை வழுக்கை?

★

தலை வழுக்கை விழுந்தவர்களுக்குச் சமீபத்தில் ஒரு நற்செய்தி கிடைத்திருககிறது உடனே வழுக்கை மாறி அடர்த்தியான முடி வளர்ந்து விடுமென்று கருதிவிட வேண்டாம தலை முடி வளரா விட்டாலும், மனசுக்காவது அச்செய்தி திருப்தி தரும்.

பிரபல அமெரிக்க வைத்திய நிபுணர் ஒருவர் வழுக்கையின் காரணத்தை ஆராய்ந்து தம் கருத்தைத் தெரிவித்திருக் கிருர். மூளை அதிகமாக வேலை செயவதால் தலை மயிர் கழிகிறது, என்று சாதாரணமாசக கருதப்படுவது சரிதானென்று அவரது ஆராய்ச்சி நிரூபித்திருக்கிறது. மூளை அதிக மாக வளர்ச்சி யடைவதால் மணடை ஓட்டி லுள்ள ரத்த நாளஙகள் அமுக்கப்பட்டு முடிக்கு போஷணை குறைந்து விடுகிறது. மூளை விரிவடைவற்குக் காரணம் அது தீவிர மாக வேலை செய்வதுதான் இதர தசைகளைப் போல் அதுவும் அடிக்கடி வேலை செய்வதால் பருமனுகிறது.

ஆனுல் இந்த மூளை விவகாரத்தில் ஒரே ஒரு கோளாறு. ரவீந்திர நாத் தாகூர், டாக் டர் ராதாகிருஷ்ணன், ஐன்ஸடேன் ஆகியோர் தலையில் அடர்த்தியான மயிர் உள்ள காரணத்தை இது விளக்கவில்லை.

## திருமண வாழ்த்து!

அருந்தவபுரம் திரு. எஸ். ராமையா வன்னியர் அவாகளின் சகோதரா திருவளர்ச் செல்வா **எஸ், தக்ஷிணுமூர்த்தி வன்னி யருக்கும்** மதகரம் திரு. வி ராமரததின நாயக்கா அவாகள் குமாரததி திருவளாச செல்வி **சரஸவதிக்கும் 10-2-57** தேதி சுவாமிமலையில திருமணம் நடைபெறறது. மணமகள் பலலாண்டு வாழ்கவென வாழததுகிறேும!

# ஆஹா பேஷ்!

என். எஸ். ஆர்,

காமாட்சி லாட்ஜிங்,
தம்புச் செட்டித் தெரு,

அம்மணி,

வணக்கம். "ஏதோ புதிதாக ஒரு நபரிட மிருந்து கடிதம் வருகிறதே, ஏதாவது நன்கொடை கேட்டு எழுதியிருக்கிறார்களோ" என்று நினைக் காதீர்.

தங்களிடம் ஒரு விஷயம் குறித்துத் தெளிவு படுத்தவே இதை எழுதுகிறேன். அதாவது, நேற்று மாலை சுமார் ஐந்தரை மணி யளவில் நீங்கள் வழக்கம்போல் கல்லூரியிலிருந்து உங்கள் ஹாஸ் டலுக்குப் போய்க்கொண்டிருந்தீர்கள். நானும் வழக்கமாக காரியாலயம் விட்டுவந்து எனது லாட்ஜ வாயிலில் சிறிதுநேரம் நிற்பதுபோல நின்றுகொண் டிருந்தேன். என்னுடன் எனது நண்பர் சிலரும் நின்றிருந்தனர். தாங்கள் எனது லாட்ஜ் வாயிலைக் கடந்து செல்லும்போது திடீரென "ஆஹா" "பேஷ்", என்ற ஒரு ஏளனக்குரல் உங்கள் காதில் விழவே, நீங்கள் சப்தம் வந்த திசையைப் பார்ப் பதைவிட்டு என்னை முறைத்துப் பார்த்தீர்கள்! உண்மையாகவும் கடவுள் பேரில் ஆணையிலும் சொல்கிறேன், அந்தக் குரல் என் தொண்டை யிலிருந்து வெளிவந்தவை அல்ல! அது என் நண் பர்களில் ஒருவன் எழுப்பியது. (அதற்காக அவனுக் குத்தண்டனை யளிப்பதற்கென்றே என் செலவில் அவனுக்கு அமுமுஞ்சி கபேயில் டிபன் வாங்கிக் கொடுத்ததன் பயனை இன்னும் வயிற்றைப்பிடித் துக்கொண்டு கட்டிலில் படுத்திருக்கிறான்)

தங்களுக்கேத் தெரியும்! நான் இந்த லாட் ஜுக்கு வந்த நாள் முதல், தினமும் காலை ஒன்பதரை மணிக்கு நீங்கள் கல்லூரிக்குப் போகும்போதும், மாலை ஐந்து ஐந்தரைக்கு திரும்பக் கல்லூரியிலிருந்து ஹாஸ்டலுக்குச் செல்லும்போதும், என் லாட்ஜ் வாயிலைக் கடந்து செல்கிறீர்கள். நானும் அந்த சமயத்தில் எனது லாட்ஜ் வாயிலில் நின்றுகொண் டிருக்கிறேன் கழிந்த இருமாதங்களாக ஒருநாளும் தாங்கள் போகும்போது அம்மாதிரி நான் நடந்து கொண்டதில்லை (நீங்களும் கவனித்திருக்கலாம்!)

ஆயினும் இம்முறை தாங்கள் தவறாக என் மீது சந்தேகம் கொண்டுவிட்டீர்களோ என்ற ஐயம் ஏற்பட்டதால், தாங்கள் அப்படி எண்ணியிருக்கும் பட்சத்தில் அது தவறு என்று உங்களுக்கறிவிக்கவே இதை எழுதுகிறேன்.

தொந்தரவுக்கு மன்னிக்கவும். உங்கள் முடிவை எனக்கறிவிப்பீர்கள் என்று நம்பும்,

தங்கள் உண்மையுள்ள,
**வி. அரிகரன்.**

குமாரி **பிரேமலதா,**
மே/பா. காமினி ஹாஸ்டல்,
எரபாலு செட்டித் தெரு.
சென்னை.

★ ★ ★

காமினி ஹாஸ்டல்,
எரபாலு செட்டித்தெரு.

ஐயா,

தங்களது கடிதம் கண்டதும் எனிக்கு ஓரேயடி யாகச் சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது. "இப்படியும் உலகில் மனிதப்பிறவிகள் இருக்கிறார்களே" என்பதை எண்ணித்தான்! நிற்க,

தாங்கள் சொல்வது போல் "ஆஹா" "பேஷ்" என்ற குரல் எனதுகாதில விழவுமில்லை; அதற்காகத் தங்களை நான் முறைத்துப் பார்க்கவுமில்லை! அந்த லாட்ஜின் சுவரில் சாத்தி வைத்திருந்த ஒரு சினிமா விளம்பரப் பலகை ஒன்றை. என் தோழியர் பலர் மிகவும் நல்ல படம் என்று ஏகமாகப் புகழ்ந்திருந்த படியால், நடிகர்கள் யார் யாரெனப் பார்த்தேனே யன்றித் தங்களை யல்ல! அப்படியே தாங்கள் சொல்வதுபோல் "ஆஹா" "பேஷ்," என்று வார்த்தைகள் என் காதில் விழுந்தனவென்றே வைத்துக்கொள்வோம்! அதற்காக......?.......கள் குரைப்பது கண்டு சூரியன் கோபப்பட முடியுமா?

உங்கள் கடிதத்திலிருந்து எனக்கு இரண்டு விஷயங்கள புலனுகின்றன. ஒன்று... உங்கள் லாட்ஜில்... அலல...' குகையில விலங்குகள்தான் வசிக்கினறன என்று எண்ணியிருநதேன். தஙகளைப் போன்ற ஒரு (சந்தேகப்) பிராணியின் கடிதம் கண்டபின அவவெண்ணம் ஊர்ஜிதமானது.

மற்ருென்று உஙகளது அபாரகற்பனைத்திறன் இதை உபயோகித்து ஏதாவது பத்திரிகைக்கு, கதை கட்டுரை எழுதி யனுப்பினுல் காசு கிடைக்குமே! உங்கள மனைவிககாவது அனுப்பலாம்.

பிரேமலதா.

குறிப்பு:- "நீஙகளும கவனிததிருக்கலாம" என்று உங்கள் கடிதத்தில் ஒரு வரி எழுதியிருநதீர்கள். நான் அந்த மாதிரி யெல்லாம "பிறர் எனககுத் தெரியாமல என்ன செய்கிறுர்கள்" எனபதை கவனிபபதிலலை என்று தெருவிக்க விரும்புகிறேன்.

* * *

குமாரி பிரேமலதாவுக்கு,

தங்கள் அன்புக் கடிதம் கண்ட பின்புதான் என் மனம் நிம்மதியானது.

தாங்கள் குறிப்பிட்டபடி ......கள் குரைப்பது கண்டு சூரியன் சினமடைய முடியாது என்பதை ஒபபுககொள்கிறேன். எனது நண்பாகளை நீங்கள் அதனுடன் உவமை சொன்னதை ஆமோதிக்கிறேன். ஆனுல தங்களைச் சூரியனுடன உவமை செய்ததை என்னுல் ஆமோதிகக முடியவிலலை என்பதை வருத்ததுடன தெரிவிக்கிறேன். தஙகளைச் சூரியனுடன ஒப்பிடுதல் முறையன்று... உதாரணமாகச சந்திரன், வெண்மதி எனறு சொலலி யிருககலாம் என்பது என் கருத்து. நிற்க,

எனது கற்பனு சக்தியைக் குறிப்பிட்டு எனது மனைவிக்கு பணம் அனுப்பலாமெனச் சிபார்சு செய்திருந்தீர்கள். உண்மை... பணமென்ன? உயிரையே அனுப்பலாம்! ஆனுல் எனக்கு மனைவியிருந்தால்த் தானே? நான் பிரம்மசசாரி ஆயிற்றே.

உங்கள் கடிதத்திலிருநதும் எனக்கு இரண்டு விஷயஙகள் புரிகதன. முதலாவதாக, நீங்கள ஒரு பெரிய துப்பறியும் நிபுணர் என்பது தெரிகிறது. என்னை ஒரு எழுத்தாளன், என்று கண்டுபிடித்ததைத்தான் சொல்கிறேன், நான் "ஆண்டி" என்ற பத்திரிகையில் "திருவோடு" என்ற புனை பெயரில் அடிக்கடி ஏழுதி வருகிறேன். தாங்களும் படித்திருககலாம். அப்படிப் படித்திராவிட்டால் இனியாவது படிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன.

இன்னுென்றைச் சொல்ல மறந்து விட்டனே. அதாவது, நீங்களும் என்னைப்போல் நல்ல சினிமாக களையேப் பார்ப்பதைத்தான் குறிபபிடுகிறேன். அந்தப படத்தை மூன்று நாட்களுக்கு முன் என் நணபர்கள் கட்டாயதின்பேரில் பார்க்கச் சென்றேன். நல்ல படம் என்பது எனது அபிப்பிராயம், ஆனுல் எனது நண்பாகள் என்னை நிம்மதியாகப் பாாகக விட்டால்தானே? ஓயாத அரட்டை! சரிவரப் பார்க்க முடியவில்லை. இந்த ஞாயிற்றுக்கிழமை யன்று அவாகளிடம் சொல்லாமல் தனியாகவே போவதென்றிருக்கிறேன்.

அரிகரன்.

குறிப்பு:-பிறர், கவனிப்பதுதான் தெரிந்துவிட்டதே! இனியாகிலும் தாங்கள் அந்தப் பிறரைக் கவனிக்கலாமே!

* * *

அரிகரன் அவர்களுக்கு,

தங்கள் கடிதம், நன்றி!

நான், "ஆண்டி" என்ற பத்திரிகைப் படிப்பது இல்லை. அபபடி ஒன்று வெளிவருவதாகவும் எனக்கு இதுவரை தெரியாது. மேலும் அநதமாதிரி பெயரே எனககு இபபோது பிடிப்பதில்லை. ஒரு பட்டிக்காட்டுப் பெயராக இருக்கிறதே. ஏதானும் நல்ல நவீன பெயர் வைக்க அதன் ஆசிரியருக்கு எழுதலாம், நிற்க,

தாஙகள் என்னைத் துப்பறியும் நிபுணர் என்று எழுதியிருக்கிறீர்கள். ஆனுல் உணமை அதுவல்ல! ஏதோ எழுதினேன். அவ்வளவுதான. ஆனுல் தாங்கள அந்தக் கலையிலும் நிபுணர் என்று தெரிந்து கொண்டேன. இல்லாவிட்டால் நானும் இந்த ஞாயிறன்று மாட்னிககாட்சிக்கு அந்தப் படத்துக்கு தனியாகப்போக நிச்சயித்திருபபது உங்களுக்கு எப்படித்தெரியும்?

அன்புடன்.
பிரேமலதா.

காமினி ஹால்டல்.

திருவாளர் அரிகரன் அவர்களுக்கு,

" ஆண்களே இப்படித்தான் " என்று சொல்ல தோன்றுகிறது எனக்கு. இம்மாதிரி சொல்லிய வார்த்தையைக் காற்றில் பறக்கவிடுவதற்கு எப்படித்தான் துணிவு வருகிறதோ? தெரியவில்லை.

எனது பரீட்சை அடுத்து விட்டதையும், ஊரிலிருந்து என் தகப்பனரிடமிருந்து வந்த அழைப்பையும் உதறித்தங்களை எதிர்பார்த்து சினிமாத் தியேட்டருக்கு வந்ததற்கு பலன்?... ஏமாற்றம்! தாங்கள் வராமல் தொலைந்ததுடனாவது நின்றிருக்கக்கூடாதா? ஏன் உங்கள் நண்பர் படையை ஏவி எனது பின் சீட்டில் உட்காரச் சொல்லி கோட்டா செய்யவேண்டும்?

அவர்கள் பேச்சிலிருந்து நான் கிரகித்த ஒரு விஷயம் என் மனதைப் புண்படுத்துகிறது. அத்தனை அவசரமாக டாக்ஸியிலே எழும்பூருக்குப்போக என்ன அவசர வேலையோ? (உங்கள் புதுக் காதலியைப் பார்ப்பதற்காக இருக்கலாம்!)

ஆனால் ஒன்று. நான் உங்களிடம் வேண்டிக் கொள்வதெல்லாம் அவளையும் இம்மாதிரி ஏங்க விடாதீர். என்னுடனே நிற்கட்டும். பெண்பாவம் பொல்லாதது!

வணக்கம்
பிரேமலதா.

அன்பே,

உனது ஏமாற்றத்தில் நீ இம்மாதிரி எழுதுகிறாய். எனது மனம் படும்பாட்டை யாரறிவார்?

தியேட்டருக்கு புறப்பட்டுக்கொண்டிருந்தேன் நான். திடீரென வந்தது போன செய்தி எழும்பூரிலிருந்து! செங்கல்பட்டுக்கு ஏதோ திருமணவிஷயமாக வந்த என் தாயும் தந்தையும் திடீரென எழும்பூருக்கு வந்தனராம். 'ஒரு அவசர வேலை உடனே வா' என்று என் தந்தை ஆணையிட, மெல்லவும் முடியாமல், விழுங்கவும் முடியாமல் டாக்ஸி எடுத்துக்கொண்டு ஓடினேன், ஏதோ? என்னவோ? என்று.

அங்கு போனதும்தான் தெரிந்தது "செங்கல்பட்டு சுப்பு சொன்னன், திருவள்ளூர் கீழத்தெரு ராமலிங்கம் பெண். கிளி, அது, இது என்று மங்கம்மா என்ற பெயருள்ள ஒரு கோட்டானைப் பார்க்க அழைத்தார்கள்" என்பதை. "தலைவலி நாளை ஆகட்டும்" என்று முனகினேன். "ம்ஹூம்" தரதர என்று இழுத்து டாக்ஸியிலேற்றினார்கள். "ம்ஹூம் எனக்கே ஊரில் அவசரவேலை... அதை விட்டு இங்கு வந்து மூன்றுமணிநேரத்தில் விஷயத்தை முடிக்கவந்திருக்கிறேன். தலைவலியாம் துரைக்கு. "அப்படி இப்படி" என்று திட்டிக்கொண்டே வந்தார் என் தந்தை. மூர்ச்சை கெட்டுவிடும்போல் இருந்தது எனக்கு. அந்த அழுமூஞ்சியின் வீட்டிற்கு போனதும் டாக்ஸியைவிட்டு நான் இறங்கவே இல்லை. கண்ணைமூடியபடி அதிலேயே படுத்திருந்தேன்.

நல்லகாலம்! அந்தக் கோட்டான் இல்லை. சென்னையில் தங்கி படிக்கும் அது "பரீட்சை சமீபித்துவிட்டது" என்று அந்த சனி ஞாயிறு விடுமுறையில் வரவில்லையாம். அதன் தகப்பனரும் இல்லையாம். இதையெல்லாம் அதன் அம்மா என் தாயிடம் சொன்னாளாம். மேலும் "பரீட்சை முடிந்தபிறகுதான் திருமணவிஷயமே" என்று கண்டிப்பாகவேறு அது சொல்லிவிட்டிருப்பதாகவும் என் அம்மா சொன்னவுடன்தான் எனக்கு தெம்புவந்தது. என் அப்பாவுக்கு முகம் கோணியது.

அதைப் பயன்படுத்திக்கொண்டு, வரும் வழியிலே ரயிலேற்றிவிட்டு அறையில்வந்து அழுதுக்கொண்டிருக்கிறேன். உன்னை நினைத்து, உன்னிடம் தந்த வாக்கை நிறைவேற்றமுடியாமற் போனதை நினைத்து...

நீயும் என்னை இப்படி உதறிவிட்டால் என் உடைந்த மனத்தை தேற்றுவார் யார்?

உன்
வி. அரிகரன்.

.........அவர்களுக்கு.
கடிதம்...... களிப்புற்றேன்.

தாங்கள் போனது கீழத்தெரு ஒன்பதாம்நெம்பர் வீடுதானே? உங்கள் தந்தை நீடு வாழ்க! செங்கல்பட்டு சுப்பு வாழ்க! நான் பாக்கியசாலிதான்!! மங்கம்மா என்றபெயர் பட்டிக்காட்டுப் பெயராக இருக்கிறதென்றுதான் இந்தப்பெயரை வைத்துக்கொண்டேன். நீங்கள் ஏன் என்னை "கோட்டான்" என்று திட்டவேண்டும் என்றுதான் புரியவில்லை.

தங்கள்,

.......பிரேமலதா......

குறிப்பு: அவசர விஷயமாதலால் எங்கள் ஹாஸ்டல் பியூன் பாலுமூலமே பதில் வருகிறது. அவன் மிகவும் நல்லவன். அவனிடமே பதில் கொடுத்தனுப்பலாம்.

★ ★ ★

கண்ணே,

ஹா ..! நீயா...? நீயேதானா அது...? என் அப்பா எப்படியும் உன்னைத்தான் நான் மணம் செய்துகொள்ளவேண்டுமென்று வரும் வழியிலே... குதியாய்க் குதித்தார்...! ரயில் ஏறும்போதும் நான் போனவுடனே ராமலிங்கம் அவர்களுக்கு எழுதுகிறேன்.. என்றுவேறு சொல்லிச்சென்றவுடன் பயந்திருந்தேன் இப்போதல்லவா புரிகிறது... இப்போதே தந்தி கொடுத்துவிடுகிறேன...! இன்றே நமக்கு அந்தப்படத்தைப் பார்க்கவேண்டும். வருகிறாயா? பாலுவிடமே பதில் அனுப்பு....

உன் பெயரைப் பற்றியென்ன...? மங்கம்மா ஆனாலும் மரப்பாச்சி ஆனாலும் நீ, நீதானே...!

(நீமட்டும் என்னை... பிராணி என்று எழுதலாமா? கோட்டான் என்றால் கோபம்வருகிறதே)

அரி.

குறிப்பு: பாலு நல்லவன்தான்... கொஞ்சம் பண ஆசை. மூன்றுமாதத்திற்குமுன் உனது பெயரை சொல்வதற்கு மட்டும் ஒரு ரூபாய் பக்ஷிஷ் வாங்கிக்கொண்டான்.)

✲ ✲ ✲

அவசியம் வருகிறேன்... டிக்கட் இரண்டு ரிஸர்வ்பண்ணிவிடுகிறீர்களா?

பிரே...

* * *

"ஆஹா பேஷாக" இரண்டென்ன? இரண்டு தியேட்டரையே ரிஸர்வ்பண்ணிவிடுகிறேன்.

அரி.

# திருமண வாழ்த்து.

23—2—57ல் காலஞ்சென்ற திரு K. ஆஸ்கரன் ஜெயின் புதல்வன் திருவளர்ச்செல்வன் **அனேப்சந்துக்கும்,** உதகமண்டலம் மெயின் பஜாரிலுள்ள திரு, லூனகரன் அவர்களின் புதல்வி திருவளர்ச்செல்வி **சந்திரகுமாரிக்கும்** உதகமண்டலத்தில் சிறப்பாக திருமணம் நடைபெற்றது மணமக்கள் பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகிறோம்.

# ஒரே விதம்!

**பஸ்ஸில் பிரயாணம் செய்து கொண்டிருந்த ஒரு பிரயாணி, அப்பாடா! என்று பெருமூச்சு விட்டு விட்டு, அருகிலிருந்த பிரயாணியைப் பார்த்து, எங்கு இந்த கலப்பட நெய் விற்காமல் போய் விடுமோ என்று என்று கவலைப் பட்டேன்; முழுவதும் விற்றுவிட்டது. நாளைக்கு இந்தப்பக்கமே திரும்பமாட்டேன்.**

**நீங்கள் எப்படியோ அப்படியே நானும்! தேர்தலில் போட்டியிடுகிறேன். கலப்பட அரசியலைக்கட்டவிழ்த்து விட்டேன். வெற்றியும் பெற்றேன். பின்னல் நானும் இந்தத் தொகுதிப்பக்கமே திரும்பமாட்டேனா!**

# திருமண வாழ்த்து.

1—2—57ல திரு P. அழகிரிசாமி ராஜா அவர்கள் புதல்வனும் தஞ்சை அய்யங்கடைத்தெரு ஸ்ரீ ராம பிரஸ், உரிமையாளருமான திருவளர்ச்செல்வன் **A. நாராயணசாமிக்கும்** மதுரை திருப்பரங்குன்றம் ரோடு, திரு M. பெருமாள் ராஜா அவர்கள் புதல்வி திருவளர்ச்செல்வி **சுலோச்சனாவுக்கும்** காரைக்கால் சமீபம் பொன்பேத்தியில் திருமணம் சிறப்பாக நடைபெற்றது. மணமக்கள் பல்லாண்டு வாழ்கவென வாழ்த்துகிறோம்.

# மதிப்புரை.

மதிப்புரைக்கு இரண்டு பிரதிகள் அனுப்பவும்

## 'தஞ்சை மணி'

### தமிழ்நாடு நகராட்சி மலர்

ஆசிரியர் : **எஸ். கணபதி.**

தமிழ் நாட்டில் நகராட்சி நிர்வாகங்களையும், பண்டை நாளில் தமிழகத்தின் ஆட்சி நிலைகளையும் இன்னும் பல அம்சங்களுடன் வெளிவந்திருக்கிறது. தமிழ் நாட்டின் முக்கிய நகரங்களின் பல படங்களுடனும் மலர் விளக்குகிறது. நிருவாக நிலையைத் தெரிந்து கொள்ளவேண்டியவர்களுக்கு இம்மலர் மிக உதவியாக விருக்கும்.

விலை ரூ. **2,**

**தஞ்சை மணி அலுவலகம்**

காந்தி பூங்கா மேற்குப்புறம்,

கும்பகோணம்.

★ ★ ★

## 'வணிக முரசு'

### பொங்கல் மலர்

சிறந்த முறையில் தமிழ் நாட்டிற்கே உரிய தனிப்பாணியில் அமைக்கப்பட்டிருக்கிறது. சிறந்த இலக்கியப் பகுதிகளும், கதை, கட்டுரைகளும் பொலிவுடன் விளங்குகிறது. வணிகர் மரபில் பல துறைகளிலும் முன்னேறி சமூகத்திற்குத் தொண்டாற்றிய பல பெரியோர்களின் புகைப் படங்களும் பொலிவுடன் விளங்குகிறது. எல்லா இனத்தவரும் போற்றிப் புகழவேண்டிய முறையில் அமைந்திருக்கிறது.

**செயலகம்,**

10, கச்சாலீஸ்வரர் தோட்டம், 2-வது தெரு'

மண்ணடி, சென்னை-1.

★ ★ ★

## 'பிறை'

ஆசிரியர் : **எ. எம். மீரான்.**

இஸ்லாமிய இலக்கியப் பண்பாட்டு. மாத இதழ். கருத்திற்கும், காலத்திற்கும் ஒத்தமுறையில் கதை, கட்டுரைகள், கவிதைகள் அமைந்திருக்கின்றன. எனையோர் பிறையை படிக்கக்கூடாதென கருதக்கூடாது. எல்லோரும் படிப்பதற்குரிய கருத்து கருவூலங்கள் 'பிறை' தாங்கி வெளிவருகிறது. 'பிறை' நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகத் தமிழகத்தில் வளருமென்பதில் ஐயமில்லை.

வருட சந்தா ரூ. 4-8-0. தனி இதழ் அணா **6.**

விபரங்களுக்கு,

நிர்வாகி : **'பிறை'**

192, அங்கப்ப நாயக்கன் தெரு,

சென்னை-1

---

## வரபெற்றோம்.

—*—

**தஞ்சை மாவட்டம் ஐந்தாண்டுச்சாதனைகள்**

தஞ்சை மாவட்டத்தில் சென்னை அரசாங்கத்தாரால் ஐந்து வருடத்தில் சாதித்த சாதனைகளை குறிப்பிடும் புத்தகம். சென்னை அரசாங்கச் செய்தி விளம்பரத் துறை வெளியீடு. நமது அலுவலகத்திற்கு தஞ்சை மாவட்ட கலெக்டர் அலுவலகத்திலுள்ள மாவட்டச் செய்தித்துறை அலுவலகத்திலிருந்து வரரபெற்றோம்,

விலை அணா 4.

**'சிவாஜி'**

ஆசிரியர்கள் :

**திருலோகசீதாராம், அ. வே.ரா. கிருஷ்ணசாமி**

வார இதழ் விலை அணா 1.

**'சிவாஜி அலுவலகம்,**

தேரடி பஜார், திருச்சி 2.

ஆசிரியரும் வெளியிடுபவரும் P. வீரபத்திரன் அவர்கள். கரந்தை, ஞாயிறுபதிப்பகத்தில் N. கணேசன் அவர்களால் அச்சிடப்பெற்றது. "உரிமை முழக்கம்" அலுவலகம்: 29, வாண்டையார் காலனி, புஷ்பவநகர், தஞ்சாவூர், தமிழ்நாடு.